இராமநாதபுரம் மாவட்டத்தில் கல்கி — I

KALKI 19.4.87 ரூ. 1.50

# கல்கி



பள்ளிக்கூடம் நான் அறியேன்;
பாதையிலும் நடந்தறியேன்!

## உங்கள் விழிகள் முன்னால் வண்ணங்கள் உயிர்பெற்று மலரும்

# ENFIELD

வண்ணம். ஆம், இது இயற்கை நமக்கு அளித்த ஒப்பற்ற பரிசுகளில் ஒன்று. வண்ணம்தான் இப்பரந்த உலகிற்கு ஒரு ஒப்பற்ற கவர்ச்சியையும் வசீகரத்தையும் அளித்துள்ளது. வண்ணம் இல்லையெனில், கேளிக்கைகள் சோபை இழந்து போகும். வண்ணம் இதை முழுமையாக அறிந்துள்ளது என்ஃபீல்ட் (Enfield)

உதாரணமாக என்ஃபீல்ட் 203R டிவியை எடுத்துக் கொள்ளுங்கள். வியக்கத்தக்க சிறப்பு அம்சங்களுடன் ஜப்பானிலிருந்து உங்களுக்காக தருவிக்கப்பட்ட டிவி. அதை இயக்குங்கள் தனித்தன்மை வாய்ந்த "பர்ஸ்ட் க்ளீனிங் சர்க்யூட்" (Burst Cleaning Circuit) அதி நேர்த்தியான வண்ணங்களுக்கு வழி வகுக்கிறது. "யூனிகலர் சர்க்யூட்" (Unicolour Circuit) அமைப்பு தானாகவே வண்ண வேறுபாடுகளை அவ்வப்போது சரிசெய்து, எப்போதும் சரியான கண்குளிர் வண்ணங்களைத் தருகிறது. "வோல்டேஜ் சிந்தசைசர்" (Voltage Synthesizer) எல்லா சமயத்திலும் படங்கள் மிகத் துல்லியமாக வருவதற்குத் தொடர்ந்து செயல்படுகிறது. இவை மட்டுமல்ல இதன் சிறப்புகள். பல பணிகளைச் செய்யும் "ரிமோட் கண்ட்ரோல்" (Remot Control), ஒலி அளவு, சானல், வண்ணம் ஆகியவற் பற்றிய தகவல்களைத் திரையில் பளிச்சிடும் அமைப் என்ஃபீல்ட் 203R டிவியின் சீரிய அம்சங்களின் பட்டியலுக்கு முடிவே கிடையாது!

உயர்நுட்பத்தின் அடிப்படையில், வண்ணங்களைப் பற்றி முற்றுமாக அறிந்திருப்பதால் மற்றொரு உன்னத டிவியையும் அளிக்கிறோம். என்ஃபீல்ட் 200E. எகானமி (Economy) டிவி ஆகிய இது எகானமி என்ன என்பதற்கு இது ஒரு புதிய விளக்கம் அளிக்கிறது.

நீங்கள் கலர் டிவி வாங்க தற்சமயம் தயாராக இல்லையென்றால் பரவாயில்லை. மனம் தளரவேண்டாம். என்ஃபீல்ட் டிவிகளுக்கு உரித்தான உயர்ந்த தரமும், படச் சிறப்பும் கொண்ட கறுப்பு-வெள்ளை டிவிகளையும் அளிக்கிறோம். மூன்று மாடல்களில் இவை உண்டு. 14" 'போர்ட்டபிள்' (Portable), 20" 'ஹாரிஸாண்டல்' மாடல் (ஷட்டர்களுடனோ அல்லது இல்லாமலோ) மற்றும் இன்றைய நவீன போக்குகளுக்கு ஏற்ப 20" வெர்டிகல் (Vertical) மாடல்

ஆகவே, எந்த டிவியை வாங்குவது என்று முடிவெடுப்பதற்கு முன்பு வண்ணங்கள் உயிர் பெற்று மலர்ந்து வருவதைக் கவனியுங்கள். உங்கள் மனது சரியாக முடிவு எடுக்க உங்கள் கண்கள் வழி காட்டட்டும்.





# என்:.பீல்ட் டிவி

கலர் & கறுப்பு-வெள்ளை

**ஒருமுறைப் பார்த்துவிட்டால், வேறு எதையும் விரும்பமாட்டீர்கள்**

● சென்னை, மதுரை, கோயம்புத்தூர், சேலம், திருச்சி, வேலூர், ஆற்காடு, மற்றும் ராணிப்பேட்டையில் மட்டுமே கிடைக்கிறது.

Mudra: M : EEL : 038 Tam



* விகடன் ஆசிரியர்



கோட்டை மதில் சுவரில் முரசடிப்பவன்: ''இதனால் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால் அரசர் அரசியார் அமைச்சர் சேனாதிபதி பற்றி யாரும் ஜோக்கடிக்கக் கூடாது. மீறி ஜோக்கடித்தால் மூன்று மாதக் கடுங் காவல் தண்டனை விதிக்கப்படும்!''

— உ. ராஜாஜி

# "சட்டமன்றத்தின் உரிமைகள் வரையறுக்கப் பட வேண்டும்"

விகடன் ஆசிரியருக்குத் தமிழகச் சட்டமன்றம் வழங்கிய தண்டனை நாடளாவிய எதிர்ப்பைத் தோற்றுவித்ததன் விளைவாக, அவரைத் தமிழக முதல்வர் விடுவித்து விட்டார். ஆயினும் பிரச்னை தீரவில்லை. விகடன் ஆசிரியர் மீது சுமத்தப் பட்ட குற்றச்சாட்டும் தண்டனையும் அப்படியேதான் இருக்கின்றன. வாபஸ் பெறப்படவில்லை. இம்மாதிரி நிலைமை, எதிர் காலத்தில் பிறருக்கு ஏற்படாது என்ற உத்தரவாதமும் இல்லை. இந்தச் சூழலில் சுப்ரீம் கோர்ட் முன்னாள் நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் ஹிந்து நாளிதழுக்கு அளித்துள்ள பேட்டி நாம் கருத்தூன்றிப் படித்துப் பயன்பெற வேண்டிய ஒன்றாகிறது. கிருஷ்ணய்யர் கூறுகிறார்:



* வி. ஆர். கிருஷ்ணய்யர்.

**த**னி மனிதன் சுதந்திரம் என்பது ஒவ்வொரு குடிமகனுக்கும் அரசியல் சாசனம் அளித்திருக்கும் உரிமை. அதைப் பறிக்கச் சட்டமன்றத்துக்கோ, அதன் சபாநாயகருக்கோ அதிகாரம் கிடையாது. சட்டமன்றத்தின் அதிகாரங்கள் இந்த அடிப்படையை ஏற்று, இந்த வரம்புக்கு உட்பட்டுத்தான் செயல்பட வேண்டும். தனி மனிதன் சுதந்திரங்கள் என்பவை தன் உயிரைக் காத்துக் கொள்ளும் சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம், கருத்துச் சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம், சட்டத்துக்கு முன் அனைவரும் சமம் என்று

கருதப்படுகிற உரிமை முதலியவற்றை உள்ளடக்கியது. இந்த அடிப்படைச் சுதந்திரங்களை மறுக்கிற விதமாக, யாரிடம் உள்ள எந்த அதிகாரமும் செயல்படவே முடியாது.

சட்டசபை என்பது இந்தச் சுதந்திரங்களை மதிக்கவும் காப்பாற்றவும் ஏற்பட்டதேயன்றி, இவற்றைப் பறிப்பதற்காக உருவானது அல்ல. அவசரத் தீர்ப்பும் கொடிய தண்டனையும் சட்டமன்றத்தின் விதிமுறைகளின்படி சட்டபூர்வமாகவே சரியாக இருக்கலாம்; ஆனால் அந்தச் சட்டத்திலேயே பல மார்க்கங்கள் உண்டு. தமிழக சபாநாயகர் அவற்றுள் மிகவும் புதிரான, மர்மத்தில் புதைந்துள்ளதான ஒரு மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிறார்.

சபாநாயகர் செய்ததில் தவறேதும் இல்லை; சட்டத்துக்கு உட்பட்டே நடந்து கொண்டார், தரப்பட்ட தண்டனை நியாயமானது என்பதாக ஒப்புக் கொள்வோமேயானால், அதே தண்டனையை ஒரு தனி மனிதனின் விருப்பத்துக்கு இணங்கி, ரத்து செய்வது என்பது சட்டத்துக்குப் புறம்பானதாகவும், தான்தோன்றித்தனமானதாகவும் ஆகிவிடுகிறது அல்லவா? இது குடியரசா அல்லது யதேச்சாதிகாரமா என்ற கேள்வியை இது எழுப்புகிறது இல்லையா? மகாராஜாக்கள் காலத்தில் அவர்கள் இப்படி நடந்து கொள்ளலாம். ஆனால் சட்டத்தின் ஆட்சி இங்கு நடப்பதாக நாம் கூறிக் கொள்ளும்போது, இத்தகைய செயல்கள் அதனைப் பொய்யாக்குகின்றன.

எல்லாவற்றையும் விட முக்கியமான பிரச்னை, மக்களுடைய சுதந்திரங்கள், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு, மக்களின் சார்பில் ஆள்கிறவர்களின் விளையாட்டுப் பொருள்கள் ஆகிவிட்டன என்பதுதான். சட்டசபையின் அதிகாரங்கள், அவற்றின் உரிமைகள் இவற்றை வரையறை செய்தாக வேண்டும். அவர்கள் என்ன செய்தாலும் யாரும் தட்டிக் கேட்க முடியாது என்ற நிலையை மாற்றியாக வேண்டும். இதற்கு ஒரு மாபெரும் இயக்கம் நடத்தப்பட்டாக வேண்டும்.

பத்திரிகை சுதந்திரம், கருத்துச் சுதந்திரம், அதனை வெளியிடும் சுதந்திரம் ஆகியவை, ஜனநாயகத்தில் கண்ணேபோல் காக்கப்பட வேண்டியவை. எந்தச் சட்டமன்றமும் இவற்றை எதிர்க்கப் போனால் மக்களின் நம்பிக்கையை இழக்கும். மேலும் சட்டமன்றம் என்பது மக்களின் மேலாதிக்கத்துக்கு உட்பட்டதே. மக்கள் தங்களுக்குத் தாங்களே வழங்கிக் கொண்ட அரசியல் சாசனத்தின்

# "விகடன் மீதுள்ள 'வடு'வை நீக்குவது எப்படி?"

## —வழக்கறிஞர் என்.டி. வானமாமலை



என். டி. வானமாமலை

**கல்கி:** சட்டமன்ற உரிமைகளை நெறிமுறைப்படுத்த வேண்டும் என்று சொல்லப்படுகிறதே. அதைச் செய்ய வேண்டியவர்கள் யார்? எப்படி?

பதில்: சட்டமன்றமே நெறிமுறைகளை ஒரு மசோதா வடிவில் கொண்டு வந்து நிறைவேற்றி, மத்திய அரசுக்கு அனுப்பி, ஜனாதிபதியின் அங்கீகாரம் பெற்றுச் சட்ட வடிவம் பெற வேண்டும். இதை ஆரம்பிக்க வேண்டியவர்கள், சட்டமன்ற உறுப்பினர்களே தான். செய்வார்களா அவர்கள்? பாட்னாவில் 'சர்ச்லைட்' பத்திரிகை வழக்கில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்புச் சொல்லும் போது, சட்டமன்ற விதிகள் (முக்கியமாக உரிமை மீறல்கள் பற்றியவை) நெறிமுறைப்படுத்தப்பட வேண்டும் என்று கூறியிருக்கிறது. ஆனால் எந்தச் சட்டமன்றமும் இதைச் செய்ய முன்வரவில்லையே!

**கல்கி:** இப்போது விகடன் ஆசிரியர் விடு

முன்னுரையில் தங்களது அடிப்படை உரிமைகளே அனைத்திலும் மேலானது, என்று கூறியிருக்கிறார்கள்.

'சட்டத்தை மதிக்காத ஆணவம்' என்ற குற்றச் சாட்டுக்கு உள்ளாகாமல், எந்தச் சட்டமன்றமும் பத்திரிகைகளின் சுதந்திரத்தைப் பறிக்க முடியாது. 'விமர்சனம் பிடிக்கவில்லை' என்று கூறி, தங்கள் செயலை நியாயப்படுத்த முடியாது. விமர்சனம் இல்லை எனில் ஜனநாயகமே இல்லை. இது, மக்கள் பிரதிநிதிகளுக்கு மட்டுமின்றி, நீதிபதிகளுக்கும் பொருந்தும். ஏனெனில் மக்களை விட உயர்ந்தவர்கள் என்று ஜனநாயகத்தில் யாருமே இல்லை. மக்களின் பிரதிநிதிகள், மக்களை விட ஒருநாளும் உயர்ந்தவர்களாகிவிட முடியாது.

மூன்று விஷயங்களைக் கவனிக்க வேண்டும். 1. நமது ஜனநாயக அமைப்புக்கள், மக்களின் அடிப்படை உரிமைகளை மதிக்கத் தெரிந்து கொள்ள வேண்டும். 2. நமது ிரதம மந்திரியோ முதல்வர்களோ தம் இஷ்த்துக்கு ஒருவனைத் தண்டிக்கவோ டுவிக்கவோ எண்ணக் கூடாது. அதற்கு வர்களுக்கு அதிகாரம் கிடையாது. 3. சட்ன்றத்தின உரிமைகள் வரையறுக்கப்பட ண்டும்.

---

தலை செய்யப்பட்டாலும் அவர் மீது சுமத்திய குற்றச்சாட்டு அப்படியே இருக்கிறதே? அதைப் போக்க என்ன வழி?

பதில்: பாலசுப்ரமணியன் நீதிமன்றத்தை நாடலாம். அவருக்குப் பதிலாக வேறு யாராவது இதுதொடர்பாக நீதிமன்றத்தை நாடலாமா என்பதைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறோம்.

கல்கி: பாலசுப்ரமணியனின் மனைவி சுப்ரீம் கோர்ட்டில் ஹேபியஸ் கார்பஸ் மனு தாக்கல் செய்தது பற்றி என்ன சொல்கிறீர்கள்?

பதில்: அரசியல் சட்டம் 21 ஆம் பிரிவுப்படி தனி மனிதனின் அடிப்படை உரிமைகளான பேச்சுச் சுதந்திரம், கருத்துச் சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம் போன்றவை பாதுகாக்கப்பட வேண்டும். இந்த உரிமைகள் பாதிக்கப்படும்போது அரசியல் சட்டம் 32 வது பிரிவின்படி ஒருவர் சுப்ரீம் கோர்ட்டை நாட முடியும். அதை அனுமதிப்பதா வேண்டாமா என்பது அந்த வழக்கின் முக்கியத்துவத்தை வைத்து சுப்ரீம் கோர்ட் முடிவு செய்யும். 1965 ஆம் ஆண்டில் உ. பி. சபாநாயகர் விதித்த ஒரு தண்டனையை எதிர்த்து வழக்குத் தொடரப்பட்டது. உரிமை மீறல் வழக்குத்தான். இதில், சுப்ரீம் கோர்ட் தீர்ப்புச் சொல்லும்போது, அரசியல் சட்டம் 13 ஆம் பிரிவின் கீழ் தனி மனிதனின் அடிப்படை உரிமைகள் பாதிக்கப்படும்போது, நீதிமன்றம் தலையிட்டு ஆய்வு நடத்த உரிமை பெற்றிருக்கிறது என்று கூறியிருக்கிறது.

புகைப்படம்: சுபா

# அடுத்த இதழ்...

**இராமநாதபுரம் மாவட்டத்தில் கல்கி – II**

**குப்பைக்குப் போன முத்தான திட்டம்**

— கவர் ஸ்டோரி



**வறட்சியைப் போக்க வழிகளா இல்லை?**

— சிறப்புக் கட்டுரை



**"இராமநாதபுரம் வறட்சிக்கும் நிரந்தரத் தீர்வு காண முடியும்!"**

— கலெக்டர் பேட்டி

# பள்ளிக்கூடம் நானறியேன்; பாதையிலும் நடந்தறியேன்!

நிலத்தால் சூழப்பட்ட தீவை நீங்கள் எங்காவது பார்த்திருக்கிறீர்களா? நீர்த் தீவுக்காவது படகு விட்டுப் பயணம் மேற் கொள்ளலாம். இந்த நிலத் தீவிற்கு எப்படிப் போவது?

இராமநாதபுரத்தில் அப்படி ஒரு நிலத் தீவைப் பார்த்தோம்.

''ஐயா, எங்கள் அனிக்கனேந்தலுக் குப் பாதையே கிடையாது. அந்த ஊரைக் கண்டுபிடிக்க நீங்கள் புறப்பட்டு வந்து, காட்டு வழியில் சிக்கி உங்களுக்கு ஏதாவது ஏற்பட்டால் அதற்கு நாங்கள் பொறுப்பல்ல' என்று நகைச்சுவையும், வேதனையும் ஊடுருவிய கடிதத்தால் வெகு வாகப் பாதிக்கப்பட்டு, இராமநாதபுரம் மாவட்டத்திற்குப் போய் அனிக்கனேந்தல் ஊருக்குப் போக வழி கேட்டால்....

''அது எங்கிட்டு இருக்கு?''

''அனிக்கனேந்தலா அப்படி ஒரு கிராமமே கிடையாதுங்க....''

இந்த ரீதியில்தான் மாவட்ட மக்கள் பதில் அளித்தார்கள். ஏறக்குறைய அலுத் துச் சலித்த நேரத்தில் திருவாடானை பக்கத் தில் ஒரு டீக்கடை ஆசாமி, ''நீங்க அனிக் கனேயைச் சொல்றீங்க போல.... இப் படியே மதுரை ரூட்ல போய், காவுத்த குடிகிட்ட நின்னு கேளுங்க, அங்கிட்டுச் சொல்வாங்க'' என்று சொன்னபிறகு தான் அனிக்கனேந்தல் என்றொரு கிரா மம் இங்கே இருக்கத்தான் செய்கிறது என்ற நம்பிக்கையே பிறந்தது.

இராமநாதபுரத்திலிருந்து ராஜசிங்க மங்கலம் வழியாக, திருவாடானையைத் தொட்டு மதுரை செல்லும் பாதையில் ஒரு பத்து கி.மீ. பயணம் செய்தால் மொட்டை வெயிலில் காவுத்தகுடி என்றொரு போர்டு தட்டுப்படுகிறது.

வெயிலில் இரண்டு சிறுமிகள் ஆடு மேய்த்தார்கள். சூன்யத்தில் வெயில் அலை. பிரதான சாலையிலிருந்து பிரிந்த மண் தடம். அதில் உருண்டு சென்று அனிக்கனேந்த லுக்கு வழி கேட்டோம்.

''இப்படியே போங்க'' என்று அந்த சிறுமி கைகாட்ட, அந்தப் பாதையில் கார் எகிறி எகிறிச் சிறிது தூரம் சென்றது. வழி நெடுகக் கருவேல மரங்கள், எருக்கஞ்செடி கள், சப்பாத்திக் கள்ளிக் காடுகள். எல்லாம் வெயிலில் வேதனைப்பட்டன.

பாதை சிறிது தூரம் சென்று தடாலென்று முடிந்துவிட, அங்கே காரை நிறுத்திவிட்டுத் திகைத்தோம்.

காலில் செருப்பணியாத ஒரு கறுப்புக் கிராமப் பெண் வெள்ளைப் பல் வரிசை தெரிய எங்களைப் பார்த்தாள். பார்வை



* அனிக்கனேந்தல் கிராமம்



யில் வியப்பு, நட்பு, திகைப்பு!

"அம்மா, அனிக்கனே போகணும்..."

"கீழ எறங்கி, வயல்ல விழுந்து போங்க. அது ஒரு ஒன்றை மைல் தூரத்தில இருக்கு" என்றாள்.

வெயில் என்றால் என்ன என்று எங்களுக்கு உணர்த்திய பயணம் அது! சிறிது தூரம் வரப்புகள் அற்ற வறண்ட வயல். காவலுக்கு நின்ற ஐயனார். அப்புறம் சிறிது தூரம் வரப்புகளுடன் வயல். (வறண்ட வயல் தான், சந்தேகமென்ன?) அப்புறம் ஒரு மண் மேடு. மேட்டின் மீது இரண்டாள் கைகோத்து நடக்கக்கூடிய ஒரு பாதை. புளிய மரங்கள் தன்னிச்சையாக வளர்ந்திருந்தன. கைக்கெட்டும் உயரத்தில் கொத்துக் கொத்தாய்ப் புளியங் காய்கள்.

சிறிது தூரம் நடப்பதற்குள் நாக்கில் ஈரம் உலர்ந்து போனது. தாகம் வாயிலிருந்து வயிறு வரை நீண்டது. சுற்றிலும் ஈயும் காக்கையும் கூடத் தென்படாத பொட்டல் காட்டுப் பிரதேசம்.

* அசோகவனத்துச் சீதை: அழைத்துப் போக வரப் போகும் இராமன் யார்?



* கணபதி

அந்தப் பிரதேசம் திடீரென்று பொடி மணல் பாதையாக மாறியது. அந்தப்பாதையின் குறுக்கில் அங்கங்கே கருவேல மரங்கள் வழி மறித்தன. வெயிலுக்கு ஒதுங்க அடுத்த ஆளின் நிழல் மட்டுமே கிடைத்த பிரதேசம் அது.

அந்த நீண்ட மணல் பாதையைத் (மாட்டு வண்டி கூடச் செல்ல முடியாத பாதை) தாண்டியவுடன் நான்கைந்து வீடுகள் வயல்களுக்கு நடுவில் தெரிந்தன. வெயிலுடன் சேர்ந்து மௌனமும் சூழ்ந்து கொண்டிருந்த அந்த வீடுகளை நெருங்கினோம்.

வீடுகள் என்றால் கான்க்ரீட்டும், செங்கல்லுமாய்க் கற்பனை செய்துவிடாதீர்கள். சின்னச் சின்னக் குடிசைகள். தப்பித் தவறி ஒரே ஒரு கட்டடம் இருந்தது.

அந்தக் குடிசைகளின் திண்ணைகளில்

* அளிக்கனேந்தலிலிருந்து குடிநீர் சுமந்து செல்லும் பக்கத்து கிராமத்துப் பெண்கள்



சில இளம் வயதுப் பெண்கள் கண்களில் கனவுகளும் கவிதைகளும் மின்ன அமர்ந்திருந்தார்கள்.

எங்களுடைய பாண்ட் சட்டைகளைப் பார்த்துவிட்டு நிச்சயம் திகைத்திருக்க வேண்டும். வெயிலில் வந்ததால் எங்களுடைய வியர்வை உப்புப் பூத்த முகங்களைப் பார்த்துப் பரிதாபப்பட்டிருக்க வேண்டும்.

''யாரு வேணும்?''

''நாங்க பத்திரிகை. இந்த ஊரைப் பார்த்துவிட்டு....''

''இந்தக் கிராமத்தையா.... ஊருக்குள்ள வாங்க....'' என்று சொல்லிவிட்டு அந்தப் பெண், மான் ஓட்டம் ஓடினாள்.

அந்தப் பெண் பக்கத்தில் இருந்த ஒரு சிறு குடிசைக்குள் புகுந்து எங்கள் வரவைத் தெரியப்படுத்த அந்த வீட்டிலிருந்து ஒரு பெரியவர் வெளிப்பட்டார். எங்களைப் பார்த்தவுடன் சிரித்தார்.

''உள்ள வாங்க....'' என்றார்.

சில்லென்ற தரையில் அமர்ந்தோம். வெளியே வெயில் பிளந்தாலும் அந்த வீட்டு மண் தரை பெரியவரின் உள்ளம் போல் குளிர்ச்சி.

''உங்க பேருங்க....''

''கணபதி....'' என்றார். ''காளியம்மா, காப்பித் தண்ணி'' என்று குரல் கொடுத்தார்.

''அதெல்லாம்....''

''வேணும்னு சொல்லக் கூடாது. வெயில்ல வந்திருக்கீங்க....'' என்று எங்கள் மறுப்பை உதாசீனம் செய்தார்.

''பாருங்க.... எங்க கிராமத்துல நாப்பது வீடுங்க இருக்கு. இரு நூறு பேர் மொத்தமா இருக்கோம். நல்லது கெட்டது எது நடந்தாலும் எங்களுக்குள்ளதான்.''

''உங்க ஊருக்கு வரதுக்கு ரொம்பக் கஷ்டப்பட வேண்டியிருக்கு!''

''அதையேன் கேக்கறீங்க. கலெக்டர் வரைக்கும் மனு கொடுத்துட்டோம். இது வரை பாதை வரலே. நடந்துதான் போகணும். உங்க கால்ல செருப்பு இருக்கு. முள்ளுத் தைக்காம வந்திருப்பீங்க. நாங்க செருப்புப் போடாதவங்க. முள்ளு மேலதான் நடந்து போகணும். ஒரு வண்டி கட்டுனாகூட, பொறத்தே நாலு பேர் தள்ளணுங்க. பாதையில நொடி நெறைய இருக்கு. மூவாயிரம் கொடுத்து மாடு வாங்கி என்ன பிரயோசனம் சொல்லுங்க! இந்த அழுகுல ஓட்டுப் போடக்கூட நாங்க திருவேகம்புத்தூருக்குத்தான் போகணும்.''

''உங்க பிள்ளைங்க படிக்க ஸ்கூலெல்லாம் இருக்கா?''

''ம். இருக்கு. மாவட்டம் பூரா ஸ்கூலு தான். இந்த ஊர்லதான் இல்ல. அஞ்சாம் கிளாஸ் வரைக்கும் படிக்கணும்னு, மூன்று கிலோ மீட்டர் நடந்து காவுத்தகுடிக்குப்



* கருப்பண்ணன் அம்பலம்

போகணும். அதுக்கு மேலென்னு திருவேகம்புத்தூருக்குப் போகணும். கடை கண்ணியா, ஆஸ்பத்திரியா சினிமாவா, ஒண்ணு கெடையாது எங்க ஊர்ல.''

''ஏன் இங்க இருக்கீங்க. வந்துட வேண்டியதுதானே வெளியிலே?''

''எங்கிட்டு? இங்கிட்டுதானே எங்க நெலம் இருக்கு. தேவக்கோட்டை தேவஸ்தான நெலம் கொஞ்சம், எங்க சொந்த நிலம் கொஞ்சம், விட்டுட்டு எங்க போவோம்?''

''ஏங்க....'' என்று அவர் மனைவி காளியம்மாள். காப்பித் தண்ணி கொண்டு வந்தார். புகை வாசனையும், வெல்லமும் நிறைய அன்பும் கலந்த காப்பித் தண்ணி.

''எங்க ஊர்ப் பையன்களுக்குப் பெண்ணு கொடுக்கறதுக்குக்கூட மத்தவங்களுக்கு யோசனைதான். காட்டுப் பய ஊருக்குப் பொண்ணு குடுக்கறது யாருன்னு கேப்பாங்க....!'' என்று காளியம்மாள் அவருடைய வருத்தத்தை வெளிப்படுத்தினார்.

''பிரசவமெல்லாம்?''

''முன்னாடியே ஆஸ்பத்திரிக்குப் போயிடணும். அப்படி இல்லையா, இங்கேயேதான். எதுவும் முடியாம போற கேஸும் இருக்கு. வாங்க வெளியே போய் ஊரை ஒரு சுத்து சுத்திட்டு வருவோம்.''

**வெ**ளியில் வந்தோம். வீட்டு முகப்பில் பனைப் பாயில் என் அந்த வெயிலில் காய்ந்

தது. எங்களையும், எங்கள் காமிராக்களையும் பார்த்துவிட்டு ஒரு கூட்டம் வால்போல் நீண்டது. கண்மாய் மேடு வரை நடந்து சென்றோம். சில சிதிலமான குடிசைகள் இடர்ப்பட்டன.

கண்மாய் மேட்டில் கருவேல மரச் சுள்ளிகள் கட்டுகளாகக் கட்டப்பட்டிருந்தன. பக்கத்தில் வந்து கொண்டிருந்த கருப்பண்ண அம்பலம், "எங்க ஊர்ல இப்ப வருமானம் இந்தக் கருவேலச் சுள்ளிங்கதான். டவுனுக்குப் (Dவுனுக்கு) போய் வித்தா காக்காசு, அரைக்காசு கெடைக்கும். எங்க? மழை பேஞ்சாத்தானே தண்ணி. தண்ணி இருந்தாத்தானே விவசாயம். பாருங்க, இதான் எங்க ஊர்க் கண்மா."

அந்தக் கண்மாய் மிகப் பெரும் பரப்பை விழுங்கியிருந்தது. கரையை மோதிக் கொண்டு நீர். நீரில் முளைத்தெழுந்த தாமரை. கரையோரம் நிழல் கொடுத்த மரங்கள். நீரில் விளையாடிய மீன்கள். நீர்ப் பரப்பில் பறந்து சந்தோஷக் குரல் கொடுத்த கொக்குகள்....

## எதுவுமே இல்லை!

வறண்ட கண்மாய். பட்டுப் போன மரங்கள். கருவேல முட்கள் நிரம்பிய ஏழைமையை வெளிப்படுத்தும் சிறு மரங்கள். பிளந்த நிலப்பரப்பு. அவர்களுடைய கண்மாய் அந்தக் கண்மாயில் ஆடுகள் அலைந்தன. பனை ஓலைக் கூடையுடனும் அரிவாளுடனும் நான்கைந்து பெண்கள் நின்று கொண்டு, தொரட்டுக் குச்சியைக் கொண்டு, அங்கிருந்த கருவேல மரத்துக் கிளைகளை உலுக்கிக் காய்களைச் சலசலத்து விழச் செய்தார்கள். ஆடுகள் அவற்றைத் தின்று கொண்டிருந்தன. அத்தனை பேரும் எழுத்து வாசனையே அறியாத பெண்கள்.. சூழ்நிலை முழுக்கச் சோகம்தான்.

கருப்பண்ண அம்பலம் கழுத்தில் அணிந்திருந்த காசித் துண்டை ஒருமுறை இறுக்கிக் கொண்டார். "ஐயா, இந்தக் கண்மாய்ல ஓர் அடி குழாய் இருக்கு. பக்கத்து ஊர்களிலேயிருந்து எல்லாம் வந்து இங்கதான் தண்ணி எடுக்கறாங்க. தண்ணி ஓரளவுக்கு நல்லா இருக்கும். இதுதான் எங்களுக்குக் குடி தண்ணி, குளி தண்ணி எல்லாம். அந்தக் கேணிக்கு ரெண்டொரு உறை போட்டாங்கன்னு, எப்பவாவது மழை பேஞ்சு இந்தக் கண்மாய்ல காலளவு தண்ணி வரப்ப, கேணி அதில மூழ்காம இருக்கும். அதுக்குக் கைப்பிடிச் சுவர் கட்டலேன்னு அந்தக் கேணித் தண்ணி வாயிலயும் மண்ணுதான். அதுக்காவது ஏற்பாடு செய்யுங்க" என்றார்.

கணபதி, "எங்க ஊருக்கு மட்டும் பாதை இல்லாம இல்லீங்க. பக்கத்தில விரிசூர், கருப்பக்குடி, காரைக்குடி, உடையாவளம், இரவிய மங்கலம் தெக்குக் குடியிருப்புன்னு அஞ்சாறு ஊருக்குப் பாதை இல்லீங்க. எங்களுக்கு போஸ்ட்மேன் கூட ஒளுங்கா வர மாட்டாரு. மெயின் ரோட்ல எங்க ஊர்க்காரங்க யாரையாவது பாத்தா அவங்ககிட்ட கொடுத்து விடுவாரு. பத்து நாளைக்கு ஒருக்கா, பதினஞ்சு நாளைக்கு ஒருக்கா போஸ்ட் வரும்... இந்தப் பாதையைப் போட்டா போதும். இந்தக் கேணிக்கு உறையெடுத்தா போதும்..."

அந்த ஊர் மக்கள் தேவைகளைக் கேட்பதற்குக் கூடத் தயங்குகிறார்கள். கோரிக்கைகளில் சிக்கனம் காட்டுகிறார்கள். நமக்குக் கண்களில் நீர் பொங்குகிறது. உள்ளங்களில் துக்கம் பரவுகிறது. அண்ணலே காந்தி அடிகளே! 'இந்தியா அதன் கிராமங்களில் வாழ்கிறது' என்று சொன்னீர்களே, எந்த அர்த்தத்தில் ஐயா?

கணபதி மறுபடி வற்புறுத்தி அவர்கள் வீட்டில் எங்களுக்கு மதிய உணவு அளித்தார். "இந்த வெயில்ல எங்க போய்ச் சாப்பிடுவீங்க?" என்று கேட்டு உபசரித்தார்.

முருங்கைக் குழம்பு. எள்ளுத் தொகையல். மிளகு ரசம். மோர். வெயிலில் காயப் போட்ட உப்பு ஊறுகாய். ஃபைவ் ஸ்டார் மரியாதை அவர்கள் மனங்களில் கிடைத்தது. கையகல இலைகளைக் கோத்து சாப்பிடும் அளவுக்கு இலையாக்கி, ஊரைச் சுற்றிப் பார்த்து வருவதற்குள் சோறு சமைத்து....

அந்த வெள்ளை உள்ளங்கள், இல்லைப் பாட்டுப் பாடாமல் சிரித்த முகங்களோடு முன்பின் அறியாத எங்களை உபசரித்தது வாழ்க்கையில் அவர்களுக்கு இருந்த பற்றை வெளிப்படுத்தியது.

புறப்பட்டோம். வரும் வழியில் அந்தக் கன்னிப் பெண்கள் கனவுக் கண்களோடு அமர்ந்திருந்தார்கள். முட்பாதையில் நடந்து நடந்து காய்த்துப் போன பாதங்கள். எழுதப் படிக்கத் தெரியாவிட்டாலும், ஈரம் நிறைந்த நெஞ்சங்கள். அந்த அசோகவனத்துச் சீதைகள், மீட்டுச் செல்ல வரப்போகும் இராமர்களுக்காகக் காத்திருக்கிறார்கள். (அட்டையில் இருப்பவர் அந்தப் பெண்களில் ஒருவரான, செல்வி காந்தி)

மறுபடி பழைய மண்பாதை. எங்களுக்கு அந்த ஊருக்குப் போனபோது இருந்த வறட்சி இல்லை. வியர்வை இல்லை. அந்த ஊரில் நாங்கள் விட்டு வந்த மனித முகங்கள்தான் எங்கள் நெஞ்சை நிறைத்திருந்தன. அவர்களின் நிலை கொடுத்த சோர்வுதான் இருந்தது.

போகிற பாதையில் அனிக்கனேந்தல் அடி குழாய்த் தண்ணீரைச் சுமந்து ஒரு பத்துப் பதினைந்து பெண்க்ள் மிக வாகவ மாக நடந்தார்கள். பேச்சும், சிரிப்பும் ஊடாடி ஊடாடி அவர்கள் பயணம்தொடர்ந்தது.

ம்ஹ்ம்! குடிக்கத் தண்ணீரில்லை; படிக்கப் பள்ளியில்லை. நடக்கப் பாதையில்லை.... இந்த அவலங்களை எழுத இனி எதிர்காலத்தில் பத்திரிகைச் சுதந்திரமும் இருக்காதோ என்னவோ, யார் கண்டது?

— சுபா

மேலட்டை வண்ணப்படமும், இராமநாதபுரம் தொடர்பான மற்ற புகைப் படங்களும்: **கே.வி. ஆனந்த்**




# கல்கி

1987 ஏப்ரல் 19
மலர் 45 இதழ் 38
பிரபவ சித்திரை 6




## படுதலம் சுகுமாரா! பலே ஆளய்யா!

ஒரே ஒரு ஜோக் எழுதி காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை நாட்டையே ஒரு கலக்குக் கலக்கிய படுதலம் சுகுமாரா, நீர் எங்கிருந்தாலும் வாழ்க! உம்முடைய ஒரே ஒரு ஜோக், எத்தனை சாதனைகளைப் புரிந்திருக்கிறது என்பதைப் பார்க்கும் போது, உமக்கு ஒரு பாரத ரத்னாவே வழங்கலாம் போலிருக்கிறது! என்னென்ன நன்மைகளைச் செய்திருக்கிறது அந்த ஜோக்? பட்டியல் போட்டுப் பார்ப்போமா?

யாரோ முகம் தெரியாத ஊர் பேர் இல்லாத ஓர் எம். எல். ஏ. வையும் யாரோ முகம் தெரியாத ஊர் பேர் இல்லாத ஒரு மந்திரியையும் நீர் கிண்டல் பண்ணப் போக, அது தங்கள் எல்லோரையுமே குறிப்பதாகவும் தங்கள் எல்லோரையுமே அவமானப்படுத்துவதாகவும் தமிழக அமைச்சர்கள் பலரும் எம். எல். ஏக்கள் பலரும் துள்ளிக் குதித்ததானது, 'அப்பன் குதிருக்குள் இல்லை' என்ற அத்தை பாட்டிக் கதையை நினைவூட்டி, அதை நாம் மறக்காமலிருக்க உதவியது.

நகைச்சுவை உணர்வு என்பது எல்லோருக்குமே இருக்க வேண்டிய அவசியம் இல்லைதான்; எனவே, அந்தக் குற்றமற்ற ஜோக்கை ரசனைக் குறைவானது என்று கருதுவார் களேயானால் அதைச் சுட்டிக் காட்டி, 'பாரம்பரியப் பெருமை மிக்க விகடன் பத்திரிகையின் முடிவுக்கே இவ்விஷயத்தை விட்டு விடுகிறோம்' என்று கூறுவதுடன், சட்டசபையினர் நின்றிருந்தால், எவ்வளவு கௌரவமாக இருந்திருக்கும்? ஆனால், செய்யாத குற்றத்துக்கு மன்னிப்புக் கேட்குமாறு வற்புறுத்தி, அதற்கு விகடன் ஆசிரியர் மசியாதபோது, கடுமையான, அநீதியான தண்டனையை வழங்கியதன் மூலம், அந்த ஜோக்கினால் ஏற்பட்டிருக்கக் கூடிய அபகீர்த்தியை விடப் பல மடங்கு அதிகமான அபகீர்த்தியைத் தங்களுக்குத் தாங்களே தருவித்துக் கொண்டார்கள்! இவ்வளவு சாமர்த்தியம் அவர்களுக்கு உண்டு என்பதை நாம் உணர உதவியது உமது ஜோக்கே அல்லவா!

சட்டமன்றத்தின் மரபுகளை மதிக்காமலும் குற்றம் புரிந்ததாகக் கருதப்படுகிறவர் தம் சார்பில் வாதாட ஒரு வாய்ப்புத் தராமலும் சபாநாயகர் நடந்து கொள்ள முடியும் என்பதை இன்று புரிந்து கொண்டிருக்கிறோம்.

'பத்திரிகை சுதந்திரம் என்பது பொறுப்புணர்வுடன் இணைந்து செயல்பட வேண்டும்' என்று அறிவுரை வழங்கும் ஆட்சித் தலைவர்கள், 'அதிகாரத்தைப் பெருந்தன்மையுடன் பயன்படுத்த வேண்டும்' என்ற பாலபாடத்தை எளிதாக மறந்துவிடக் கூடும் என்பதை நாம் இப்போது தெரிந்து கொண்டிருக்கிறோம்.

பொதுவாகவே தாம் உண்டு தமது பத்திரிகைப் பணி உண்டு என்று ஒதுங்கி






யிருக்கும் விகடன் ஆசிரியர் பாலசுப்ரமணியன், தாம் பார்ப்பதற்குத்தான் பசு; பாய்ந்தால் புலி என்று நிரூபிக்க ஒரு வாய்ப்பை அளித்தது உமது ஜோக்தானே! அநீதிக்குத் தலைவணங்க மாட்டேன் என்று அவர் துணிந்து நின்றதானது, புராண, சரித்திர புருஷர்களின் வீரத்தை நினைவூட்டி, தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் அனைவரையும் மெய்சிலிர்க்கச் செய்து விட்டதே!

சாதாரணமாக ஒருவரை ஒருவர் குறைகூறிக் கொண்டும் கருத்து மாறுபட்டும் தத்தமது போக்கில் செல்லும் பத்திரிகை ஆசிரியர்கள், பத்திரிகைச் சுதந்திரத்துக்கு ஓர் ஆபத்து என்றால் விட்டுக் கொடுக்காமல் ஒன்றுபட்டு ஒரே சிந்தனையாக நிற்பார்கள் என்பதை இந்த நிகழ்ச்சி உறுதிப்படுத்தியிருக்கிறது.

பத்திரிகை சுதந்திரம் என்பதை, அரசியல் சாசனம் அடிப்படை உரிமையாகத் தந்திருந்த போதிலும் அதற்கு ஜனநாயகப் போர்வையில் உலாவும் சர்வாதிகாரச் சக்திகளாலேயே ஆபத்துக்கள் நாலு திசைகளிலிருந்தும் வரக்கூடும். பத்திரிகைச் சுதந்திரத்தைக் காப்பாற்றக் கூடியது பத்திரிகை ஆசிரியர்களின் மனோதிடமும் விழிப்புணர்ச்சியும், மக்கள் அளிக்கிற ஆதரவும்தான் என்பதை இப்போது முன்னிலும் சிறப்பாக அறிந்து கொண்டிருக்கிறோம் நாம்.

முதல்வரின் சம்மதமின்றியே நடவடிக்கை எடுக்கப்பட்டது, தண்டனை வழங்கப்பட்டது; அவருடைய பெருந்தன்மையே விகடன் ஆசிரியரை விடுவித்தது என்றெல்லாம் வெகு சுலபமாக அதிகாரத்தில் உள்ளோர் நாடகமாட முடியும் என்பதை நன்றாக இன்று உணர்ந்து, முன்னிலும் புத்திசாலிகளாகியிருக்கிறோம்!

சட்டமன்ற சபாநாயகர் அறிவாளியாக இருந்தால் போதாது; நடுநிலையாளராக, உணர்ச்சிவசப்படாதவராக, சட்டத்துடன் தர்மத்தையும் கடைப்பிடிப்பவராக, நிதானம் இழக்காதவராக இருக்க வேண்டும்; அத்தகையவரையே எதிர்க்கட்சிகளின் ஒப்புதலுடன், ஆளும் கட்சி பதவியில் அமர்த்த வேண்டும் என்ற ஜனநாயக மரபின் முக்கியத்துவம் முன் எப்போதையும் விட நன்றாக இன்று உணரப்படுகிறது.

சட்டமன்றத்தின் ஒரு தீர்ப்பை எதிர்த்து ஒருவன் நீதிமன்றத்துக்குக் கூடச் செல்ல முடியாது என்கிற நிலை நியாயமானதா என்பது குறித்தும் சட்டமன்றத்தின் உரிமைகளுக்கும் அதிகாரங்களுக்கும் 'வானமே எல்லை' என்று கருதப்படுகிற நிலை சரியானதா என்பது பற்றியும் அறிஞர் பெருமக்களைச் சிந்திக்க வைத்திருக்கிறது.

இவ்வளவையும் இதற்கு அதிகமாகவும் சாதித்ததுடன், இந்திய ஜனநாயகத்தின் சரித்திரத்தில் ஒரு முக்கியமான இடத்தை விகடனுக்கும் அதன் ஆசிரியருக்கும் ஏற்படுத்தித் தந்திருக்கிற படுதலம் சுகுமாரா, நீர் பலே ஆளய்யா!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# க்ளூகோன்-டி ஸூப்பர்ஹீரோ.

களைப்பூட்டும்
வெய்யிலிலும்
களிப்பூட்டும்
சக்திப்பெருக்கு

களைப்பூட்டும் வெய்யில் நாளிலே உங்கள் குழந்தைக்குத் தேவை க்ளூ கோன்-டி: க்ளூகோஸ், விட்டமின்-டி, கால்ஸியம் ஃபாஸ்ஃபேட்டுகள் அடங்கிய உடனடி சக்திபானம்.

பழரசம், தேநீர், காபி அல்லது தண்ணீரிலே கலந்து அருந்த, குடும்பத்தினர் அனைவர்க்குமே புத்துணர்ச்சி தரும் பானமாக அமைகிறது. 100, 200, 500 கிராம் பேக்கெட்டுகளில் கிடைக்கிறது.




புதிய, அசல்,
வண்ணமயமான
பேக்கைப் பார்த்து
வாங்குவீர்.

**க்ளூகோன்-டி**

ஸூப்பர்ஹீரோ மிகவிரும்பும் சக்திபானம்.

HTA 1097

# ஊர் இரண்டுபட்டது; பள்ளிக்கூடம் பாழானது!

இராமனுதபுரம் — சாயல்குடி நெடுஞ்சாலை சமீபமாக ஓர் ஊர். மேலச் செல்வனூர். பஞ்சாயத்து மூன்றில் இரண்டு பங்கும், கிராமம் மீதியைப் போட்டும் செலவு செய்து ஒரு துவக்கப் பள்ளியை ஆரம்பித்தார்கள்.

கவனியுங்கள், மருத்துவக் கல்லூரி இல்லை! வெறும் துவக்கப் பள்ளிதான். ஆனால் அதைக் கூட யார் நிர்வகிப்பது என்பதில் குடுமிப் பிடிச் சண்டை; கோஷ்டிகள். நெருங்கிய உறவினர்களே எதிரெதிராய்க் குற்றம் சொல்லும் அவஸ்தைகள். எல்லாமாகச் சேர்ந்து இந்தக் கட்டுரையின் கடைசி பாராக்களில் ஒரு க்ளைமாக்ஸின் விறுவிறுப்பையே கொண்டு வந்துவிட்டன என்றால் பாருங்களேன்!

நாங்கள் போனபோது, பள்ளிக்கூடத்திற்கு லீவு விட்டிருந்தார்கள். கட்டடத்தைப்



* உலக சேர்வை



* முருகையாத் தேவர்

பார்த்தாலே போதும். ஏரான விழுப்புண்கள்.

சத்துணவு சமையல் கூடமாய் இருந்தது. இப்போது கூரை இல்லாமல் ஒரு ராட்சஸ எறும்புப் புற்று போல வானத்தைப் பார்த்துத் திறந்து போட்டுக் கிடக்கிறது. ஜன்னல்கள், கதவுகளை இழந்திருக்கின்றன.

"பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் திறந்து வச்ச ஸ்கூலுங்க இது. ஒரு காலத்தில எங்க கிராமத்தை 'மாதிரி கிராமம்'னு பாராட்டி அறிவிச்சாங்க. எட்டு ஆசிரியருங்க வேலை பார்க்கிற உயர் தொடக்கப் பள்ளியா இருந்த ஸ்கூலு இப்போ மூணே மூணு ஆசிரியர்களோடதான் செயல்படுது." ஊராட்சி மன்றத் தலைவர் முருகையாத் தேவர் புலம்பினார்.

"ஏன் அப்படி?"

"எல்லாம் கோஷ்டி சண்டைதான். கிராமத்தில் பதிமூணு மெம்பர்களைத் தேர்ந்தெடுத்து கமிட்டி அமைப்போம். அந்தக் கமிட்டில இப்ப குழப்பம். ரெண்டு கோஷ்டியாப் பிரிஞ்சிடுச்சு. வாத்தியாருங்க எல்லாமே ஹெட் மாஸ்டரா ஆயிடணும்னு ஆசைப்பட்டா எப்படிங்க? கோர்ட் வரைக்கும் போய்த் தங்கசாமி சேர்வைதான் மேனேஜர்னு தீர்ப்



* இதுதான் சத்துணவுக் கூடம்

பாயிடுச்சு. அந்தக் கோஷ்டியோட கையில அவர் வெறும் பொம்மை மாதிரி. இப்ப எட்டாம் கிளாஸ்ல படிக்கிறது ஒரே மாணவன்தான்...."

"அது எப்படிங்க? பிடிக்கலேன்னா கமிட்டியை மாத்தி அமைக்கக் கிராமத்திலே இருக்கிறவங்களுக்கு உரிமை இருக்கே?"

"எப்படியோ போகட்டும்னு நாங்கள்லாம் ஒதுங்கிட்டோம். எங்க பிள்ளைங்களையே இப்போ வெளியூர் ஸ்கூலுங்களுக்குத்தான் அனுப்பிட்டிருக்கோம். அரசாங்கத்தில கொடுக்கிற உதவிப் பணத்தையெல்லாம் விழுங்கிட்டிருக்காங்க, பதினைஞ்சு வருஷங்களா!"

"பதினைஞ்சு வருஷங்களா நீங்க அந்த கமிட்டியையேவா தேர்ந்தெடுக்கறீங்க?"

"நாங்கதான் வம்புக்கே போறதில்லீங்களே. சத்துணவு சமைக்கிற இடத்தில இருந்த மரச் சாமானையெல்லாம் எடுத்து அவங்க பூட்டி வச்சப்புறம்கூட நாங்க தகராறு பண்ணாம சுமுகமாப் போகத்தான் இஷ்டப்படறோம்" என்கிறார் சத்துணவு அமைப்பாளர் நக்கீரன்.

"அது மட்டுமில்லீங்க. அறுபத்தஞ்சடி ஆழத்துக்கு போரிங் போட்டு நல்ல தண்ணி வர ஏற்பாடு பண்ணியிருந்தது. அந்தக் குழாய் ஸ்கூல் மைதானத்தில் இருக்கிறதை விரும்பாம, அதுக்குள்ள மண்ணைப் போட்டு

மூடி வச்சுட்டாங்க, பாருங்க....''

இவர்கள் தரப்பில் நியாயமிருக்கிறதோ இல்லையோ இன்னும் கொஞ்சம் பொறுப்பாக, 'நாங்க என்னங்க செய்யறது?' என்ற நழுவும் மனப் போக்கிலிருந்து மாறலாம் என்று தோன்றுகிறது.

**அடுத்த தரப்பு?**

கமிட்டித் தலைவர் உலக சேர்வையைச் சந்தித்தோம்:

''வாத்யாருங்க எல்லாம் நல்லவங்க. கிராமத்தில இருக்கிறவங்கதான் இந்த ஸ்கூலை இழுத்து மூடணும்னு பாக்கறாங்க. மேனேஜ்மெண்ட் ஸ்கூலைப் பஞ்சாயத்து ஸ்கூலா மாத்திடணும்னு துடிக்கிறாங்க. ஆறு கோர்ட்ல — ஒரு கோர்ட் இல்ல, மூணு கோர்ட்ல எங்க பக்கம்தான் தீர்ப்பாயிருக்கு.''

''பால்வாடி கட்டறதுக்கு அரசாங்கம் முன்வந்து அஸ்திவாரம் போட்டிருக்கறப்ப, கட்டக் கூடாதுன்னு தடை உத்தரவு வாங்கிட்டீங்களாமே?''

''ஆமா, வாங்கிட்டோம். ஸ்கூலைச் சேர்ந்த எடத்தில ஏன் கட்டணும்?''

''சரிங்க, நீங்க எத்தனை வருஷமா இங்கே தலைவரா இருக்கீங்க?''

''பதினேழு வருஷமா...''

''அரசாங்க உதவிப் பணம் எவ்வளவு வருது?''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது...''

''அதில் ஏதோ தில்லுமுல்லுன்னு சொல்றாங்களே, எவ்வளவு பணம்னு கூடவா தெரியாது? பதினேழு வருஷமா இருக்கீங்க!''

''அப்படிக் கேளுங்க'' என்று பின்னாலிருந்து ஒரு குரல் கேட்டது. அது முதல் கோஷ்டியின் குரல். அவ்வளவுதான் உலக சேர்வையின் முகம் சிவந்து போனது.

''நீங்க கலாட்டாப் பண்ணத்தான் வந்திருக்கீங்க...'' என்று எங்களையே குற்றம் சாட்டினார். ''நான் மேற்கொண்டு எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லத் தயாரா யில்ல....'' என்று கோபமுகத்தோடு கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டார்.

நாங்கள் மேலே பேசுமுன் இந்தப் பக்கமிருந்து சில செருப்புக்கள் அந்தப் பக்கம் வீசப்பட்டன. அந்த சைடிலிருந்து, கழிகள், கம்புகள் ஏந்திய கைகள் பாய்ந்து வந்தன. சட்டைகள் பற்றப் பட்டன. எங்கள் சமாதானம் எடுபடாமல் ஓர் அவசர யுத்தமே ஆரம்பமாயிற்று. ஓர் ஆள் எங்களை அணுகினார்.

''இங்க இப்படித்தான் நடக்கும். இனி உங்களால் ஏதும் செய்ய முடியாது. விபரீதமாவும் நடந்திடாது. நீங்க இடத்தைக் காலி பண்ணுங்க... இல்லாட்டித்தான் ஏதாவது எசகு பிசகாப் போயிடும்....'' என்று எச்சரித்தார். வாடகைக் காரின் டிரைவர் ஒரே பாய்ச்சலில் சீட்டில் போய் உட்கார்ந்தார்.

வேறுவழியின்றி நாங்கள் புறப்பட்டோம். போகிற வழியில் கீழச் செல்வனூர் போலீஸ் ஸ்டேஷனில் நுழைந்து கலாட்டாப் பற்றிச் சொன்னபோது, ''அது கடலாடி எல்லைங்க. நீங்க அங்கதான் போய்ப் புகார் பண்ணணும்'' என்றார்கள் போலீஸார்.

யார் பக்கம் நியாயம்? என்னதான் அநியாயம் நடக்கிறது இந்தத் துவக்கப் பள்ளியில்? உள்ளூரில் நோய்வாய்ப்பட்ட பள்ளியை வைத்துக் கொண்டு பிள்ளைகளை வெளியூருக்கு அனுப்பிப் படிக்க வைப்பது கேவலமில்லையா? நியாயத்தை விசாரிக்கச் சென்ற நம் முன்னாலேயே உணர்ச்சிவசப்பட்டு அடித்துக் கொள்ளும் அந்த மக்கள், அறிவு பூர்வமாகச் சிந்தித்துப் பார்த்தாலொழிய விமோசனமில்லை.

— சுரேஷ் — பாலா

# மாதம் ஒரு மாவட்டம்



நினைவுபடுத்துகிறோம்,

மறுபடியும் கன்னியாகுமரி, தருமபுரி, அண்ணா மாவட்டங்கள்....

சென்ற ஆண்டு ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் கன்னியாகுமரி, தருமபுரி, அண்ணா மாவட்டங்களில் நாம் விசிட் செய்து பிரச்னைகளை வெளியிட்டிருந்தோமல்லவா! அவற்றுக்கெல்லாம் தீர்வு காணப்பட்டிருக்கின்றனவா, இல்லையா? தீர்வு காணப்பட்டதையும் எழுதுங்கள், தீர்வு காணப்படாததையும் எழுதுங்கள். நமது நிருபர்கள் ரீ—விசிட் செய்ய வருகிறார்கள்.

கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.4.87.

உடனடியாக எழுதி அனுப்புங்கள்!

— ஆசிரியர்

பி.கு.: புதிய மாவட்டம் பற்றிய அறிவிப்பு வரும் மே முதல் வாரக் கல்கி இதழில் வெளியாகும்.

# தங்க கவரிங் நகைகளுக்கு
# தன்னிகரற்ற பெயர் "மேரி"

கண்ணைக் கவரும், அழகும், பொலிவும், தரமும் உத்திரவாதமும் உடைய உலகப் புகழ்பெற்ற 22ct "மெரி" தங்க கவரிங் நகைகளை வாங்கி அணிந்து மகிழுங்கள்!

நகைகளின் நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் நகைகள் அனுப்பப்படும். வி.பி.பி. சார்ஜ் தனி. இலவச கேட்லாக்கைப் பெற எழுதுங்கள்!






## மேரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

தபால்பெட்டி : 1405, 14, ரங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை-600 017.

# லாபம் அதிகரிக்க ஒரு மோசமான யோசனை!

எம்.டி.யின் அறை—

நன்றி!

கங்கிராட்ஸ் பிரதீப்! இருநூறு பேர் போட்டியிட்ட இன்டஸ்ட்ரியல் இஞ்ஜினியர் பதவி உங்களுக்குத்தான் கிடைத்திருக்கு!

கதை: எஸ். பாலகிருஷ்ணன்

நன்றி வேணாம்.. உங்க திறமையைக் காட்டுங்க! போய் ப்ரொடக்ஷன் லைனைச் சுற்றிப் பார்த்துட்டு, சாயுங்காலத்துக்குள்ள ஒரு லாபகரமான யோசனை சொல்லுங்க!

ஷ்யூர் சார்!

கவனத்துடன் சுற்றிப் பார்த்தான் பிரதீப்—

பார்க்கிங் பகுதிக்கு வந்த போது—

?

ஐடியா!


மானேஜர்! இந்தப் பொருளோட உற்பத்திச் செலவில் இந்த பாலீதீன் கவரின் விலை எத்தனை சதவிகிதம்?
இருபது சதவிகிதம்! ஒரு கவரின் விலை ஒரு ரூபாய்!
இதைவிட லேசான ஆனால் தரமான பாலீதீன் கவர் கிடைக்குமே?!


கிடைக்கும்!?
யோசனை கிடைச்சுப் போச்சு! இப்பவே எம்.டி.யைப் பார்க்கிறேன்!
ஒன் மினிட்!..
இந்தப் பாலீதீனைதான் உயர்ந்த ரகம் என்று அவர் வாதாடினால்...?
செலவைக் குறைச்சா அவர் ஏன் சார் வாதாடணும்?


மானேஜரின் பதிலில் பிரதீப் பிரமித்துப் போனான் -
இந்தப் பாலீதீன் கவர்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலை எம்.டி.யின் மருமகப் பிள்ளைக்குச் சொந்தமானது!
!

# வேலைக்காரன்

முதலாளி சரத்பாபு சொத்துக்களை விற்க முடிவெடுத்தவுடன், அதைத் தடுப்பதற்காக மாற்றுத் திட்டம் ஒன்றைப் போட்டுச் செயல்படுத்துகிறாரே ரஜினிகாந்த்—குழந்தைத்தனம் என்றாலும், விரசமும், தீங்கும் இல்லாத கலகல நகைச்சுவை என்பதனால் பாராட்டலாம்.

கிராமத்து ராஸ்கோல் தாத்தா வி. கே. ராமசாமியை விட ஃபாரின் ரிட்டர்ன்ட் வி. கே. ராமசாமி ஜோர்.

ஹோட்டலில் பாடப்படுகிற அந்த அந்தாதிப் பாட்டு, நாயகியை அறிமுகம் செய்யும் பாட்டு. இத்தனை நாள் பார்க்காத ஒரு வித்தியாசமான அமலாவை அறிமுகப்படுத்தியிருக்கிறார் டைரக்டர். மேக்கப் கூட ஒரு காரணமாயிருக்கலாம்.

'எனக்காக அவர் காத்துக்கிட்டு இருப்பார்' என்று வெடிகுண்டு ஒன்றை வீசிவிட்டு அமலா போய்விட, ரஜினிகாந்த் திகைத்து அமலாவைத் தொடர்ந்து போய் ஒரு டிஷ்யூம் டிஷ்யூம் செய்துவிட்டு அமலா சொன்ன 'அவர்' அமலாவின் அண்ணன் என்று தெரிந்ததும், 'அண்ணனா, அண்ணனா' என்று கேட்டுக்கேட்டு உறுதி செய்து கொள்ளும் இடம் புன்முறுவலை வரவழைக்கும் இடம்.

ரஜினிக்கும், அமலாவிற்கும் இடையில் மெல்ல மெல்ல மலரும் காதலில் மென்மை, இதம், கிளுகிளுப்பு எல்லாம் இருக்கின்றன.

கே. ஆர். விஜயா படம் முழுக்க பளபளவென்று இருக்கிறார். என்னவோ தெரியவில்லை, அவர் விடுகிற கண்ணீரிலும், சிரிக்கிற சிரிப்பிலும் செயற்கைத் தன்மைதான் நிறைய இருக்கிறது.





பனி மழைக்கு இடையில் ரஜினியும் அமலாவும் டூயட் பாடுகிற சீனில் காமிரா விளையாடி இருக்கிறது. பாட்டும் ரசிக்கக் கூடிய பாட்டுத்தான்.

சரத்பாபு பரவாயில்லை.

க்ளைமாக்ஸ்தான் சரியான கண்ணாமூச்சி ஆட்டம். இவர் கையில் துப்பாக்கி, அவர் கையில் கத்தி. இதோ முடிந்துவிட்டது, இதோ முடிந்து விட்டது என்று சொல்லிச் சொல்லியே இழுக்கப்படும் ஜவ்வு மிட்டாய்.

அங்கங்கே சண்டை இருக்கிறது. பாட்டு இருக்கிறது. காமிராக்கார செந்தில் இருக்கிறார் (சொல்ப நேரம்).

கதைதான்...... அதைப் பற்றிப் பேசி அனாவசியமாக மூடைக் கெடுத்துக் கொள்ள வேண்டுமா, என்ன?

— ஜெயமன்மதன்

ஸ்தாபிதம்: 1942 போன்: 2379

**'சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு'**

# கும்பகோணம் லலிதா பார்மஸி

(D.L. No. 40/83)

157, பட்டமங்கலத் தெரு, மயிலாடுதுறை, Pin: 609 001.

பிராஞ்ச்: 39, ரெங்கனுதன் தெரு, தி. நகர், சென்னை—17,
போன்: 441454

வைத்ய ஆலோசனை பெற விரும்புவோர் தபால் மூலமோ நேரிலோ மயிலாடு துறை விலாசத்துடன் தொடர்பு கொள்ளவும்.

எமது விசேஷ தயாரிப்புகள்:

1. நீலி பிருங்காமலக தைலம் — அகால நரை, செம்பட்டை கேச வறட்சியை போக்கிக் கூந்தலுக்கு கருமையும் குளிர்ச்சியும் தர;
2. மதுயஷ்டி தைலம் — மயிர் உதிர்தலை நிறுத்தி கூந்தல் வளர்ச்சி பெற,
3. யௌவநீ ரஸாயனம் — ஆண்களுக்கான சிறந்த டானிக்
4. பஞ்சதிபாக்னி லேஹ்யம் — பிரஸவித்தபின் பெண்கள் உபயோகிக்கச் சிறந்தது.



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 200/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2000/— மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 200/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி
D—76, மூன்றுவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்—612 001.

25ம் ஆண்டு வெள்ளி விழாவை காணும்



**கார்னேசன் ஜுவல்லர்ஸ்** ஸ்தாபனத்தார் வழங்கும்

மாபெரும் சிறப்பு பரிசு திட்டம்

*தாங்களும் அதிர்ஷ்டசாலியாக இருக்கலாம் அல்லவா*

| மாதம் | 25 மாதங்களுக்கு | வட்டி | மொத்தம் |
|---|---|---|---|
| ரூ. 100 | ரூ. 2,500 | ரூ. 350 | ரூ. 2,850 |

சிறப்புத் தொகை ரூ. 10,000

மாதம் ரூ. 100 வீதம் செலுத்தி 25 வது மாதத்தில் ரூ. 2500 உடன் வட்டி 350 சேர்த்து மொத்தம் ரூ. 2,850 ஆகவும், இந்த திட்டத்தில் நடக்க இருக்கும் குலுக்கலில் வெற்றி பெற்றவருக்கு பரிசுத் தொகையான ரூ. 10,000 த்திற்கு வாடிக்கையாளர்களின் விருப்பப்படி வைரத்தோடு அல்லது தங்கநகையாக கொடுக்கப்படும் என்பதை மகிழ்வுடன் வாடிக்கையாளர்களுக்கும், நண்பர்களுக்கும் தெரியப்படுத்துகிறோம்.

வாடிக்கையாளர்கள் அங்கத்தினர்களின் வேண்டுகோளை முன்னிட்டு புதிய 'C' குரூப் ஆரம்பிக்கின்றோம், என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். குறிப்பிட்ட காலத்திற்குள் குரூப் முடிவடையும்.

விபரங்களுக்கு நேரிலோ அல்லது தபால் மூலமோ தொடர்பு கொள்ளவும்.

**கார்னேசன் ஜுவல்லர்ஸ்**

தெற்காவணி மூலவீதி, (Y. M. C. A.) சமீபம்), மதுரை-1. போன்: 30108

— கண்ணன்




மின்மினி, 2, புது ஆவடி சாலை, கீழ்ப்பாக்கம், சென்னை-600 010.

## சென்ற வாரம்:

மழை பலமாகப் பெய்து கொண்டிருந்த ஒரு நாள் இரவு. முரளியும் அவன் மனைவி லலிதாவும் தங்கள் வீட்டு ஹாலில் நீதிபதியும் வக்கீலும் இல்லாமல் ஒரு 'சைலண்ட் டைவர்ஸ்' செய்து கொள்ள முடிவு செய்கிறார்கள். பத்து வருடத் தாம்பத்தியத்துக்குப் பிறகு எடுக்கப்படும் இந்த முடிவை அவர்களுடைய இரண்டு குழந்தைகளின் நலன் கருதி ஊரறிய, உலகறியச் செய்ய வேண்டாம் என்பதில் இருவருக்கும் உடன்பாடு. காற்று பலமாக வீச, மின்சாரம் துண்டிக்கப்படுகிறது.......

பாலகுமாரன்



## -2-

"இடிக்குப் பயப்படக் கூடாதுடா முரளி" — அம்மா, மடியில் சுருண்டு ஒண்டிக் கொண்டிருந்த பிள்ளையை நெருங்கி அணைத்துக் கொண்டாள்.

மின்னல் சீறிற்று. தெருவை நச்சென்று அறைந்தது. இடி சடசடத்து இறங்கிற்று.

பிள்ளை இன்னும் நெருங்க ஒண்டிக் கொண்டான்.

"அர்ஜுனா அர்ஜுனா அர்ஜுனான்னு சொல்லு."

சொன்னான்.

மெல்லிய மீசையும் கூர்மையான நாசியும் சின்னக்கிரீடமும்கலசமும்கையில்காண்டீபமுமாய் உருவம் கொண்ட இளைஞனை நினைத்துக் கொண்டு 'அர்ஜுனா அர்ஜுனா' என்று முனகினான். மனசுக்குள் கைகூப்பினான்.

மழை பலமாய்ப் பெய்யத் துவங்கிற்று. அம்மா ஜன்னல் கதவுகளைச் சாத்திவிட்டு வந்தாள். சமையலறையில் ஒழுகும் இடங்களுக்குப் பாத்திரங்கள் வைத்தாள். மீண்டும் மின்னல்-வெட்டி இடித்தது.

"அம்மா, அர்ஜுனனுக்கு இடின்னா பயம் இல்லையா?"

"இல்லே. தூங்கு."

"அர்ஜுனன் கதை சொல்லேன்."

குளிருக்கு இதமாய்ப் போர்வைக்குள்ளிருந்தபடி அம்மாவைக் கட்டிக் கொண்டு, 'கதை சொல்லேன்' என்று கெஞ்சினான்.

"ஒருநாள் வானத்துல புருஷனும் பெண்டாட்டியுமா இரண்டு கந்தர்வர்கள் பறந்து போயிண்டிருந்தா..."

"கந்தர்வர்கள்னா யாரு?"

"அப்புறம் சொல்றேன். இப்பக் கதை கேளு. பொண்டாட்டியோட சிரிச்சுப் பேசிண்டு பறந்திண்டிருந்த கந்தர்வன், வாயில் போட்டுண்டிருந்த வெத்தலை பாக்கைக் கீழே துப்பினான்."

"கந்தர்வர்கள் கூட வெத்தலை பாக்கு போட்டுப்பாளா?"

"கதை கேளு!"

"அப்படித்துப்பின எச்சில், கீழேகுளத்தங்கரையில் ஜபம் பண்ணிண்டிருந்த கிருஷ்ணர் கையில் விழுந்தது. கிருஷ்ணர் கையில் அர்க்ய ஜலம். ஜலத்தில் கந்தர்வன் துப்பின எச்சில். கிருஷ்ணர் நிமிர்ந்து பார்த்தார்.

"ம்ம்ஹூம் படவா.., உனக்கு அத்தனை திமிரா? உன்னை என்ன பண்றேன் பார்... இன்னிக்குச் சாயந்திரத்துக்குள்ளே உன் தலை என் கால்ல வந்து விழலே, நான் கிருஷ்ணர் இல்லேன்னு சபதம் பண்ணினார்..."

"அச்சச்சோ..."

"கந்தர்வனுக்குக் கிருஷ்ணர் சபதம் தெரிஞ்சு போச்சு. பயந்துட்டான். கிருஷ்ணர்கையலம்பிண்டுவீட்டுக்குள்ளேபோயிட்டார். கந்தர்வனுக்கு என்ன பண்றதுன்னு தெரியலே. அவன் பொண்டாட்டி 'ஓ'ன்னு அழ ஆரம்பிச்சுட்டா.

"கந்தர்வன் நேரே சிவன்கிட்டே போனான். இந்த மாதிரி நான் ஒரு தப்புப் பண்ணிட்டேன். கிருஷ்ணர் என் தலையைச் சாயந்திரத்துக்குள்ளே வாங்கிடுவேன்னு சபதம் பண்ணிட்டார். என்னை எப்படியாவது காப்பாத்துங்கோன்னு அழுதான். சிவன்

என்னால் முடியாது'ன்னுட்டார். பிரம்மாகிட்டே போனான். 'சிவனே முடியாதுன்னா நான் என்ன பண்ண முடியும்? எனக்குச் சண்டை போட்டுப் பழக்கமில்லை. அதுவும் கிருஷ்ணரோட சண்டை போட்டு யார் ஜெயிக்கிறது? உன் விதி அவ்வளவுதான்'னுட்டார்.

''கந்தர்வனுக்கு ஒண்ணும் புரியலை. புருஷனும் பொண்டாட்டியும் ஓ'ன்னு கட்டிண்டு அழ ஆரம்பிச்சுட்டா. அப்போ அந்தப் பக்கமா நாரதர் வந்தார். நடந்த சண்டையைக் கேட்டார். 'அப்பா, உன்னை இந்த ஆபத்துலேர்ந்து யாரும் காப்பாத்த முடியாது — ஒரே ஒருத்தனைத் தவிர'ன்னார். யாருன்னு கேட்டான் கந்தர்வன். அர்ஜுனன் ஒருத்தன்தான் கிருஷ்ணனை எதிர்த்துச் சண்டை போட முடியும். அவன்கிட்டே போய்க் கேளு. நீ போகாதே. உன் பொண்டாட்டியை அனுப்பிக் காப்பாத்தச் சொல்லு'ன்னார்.

''கந்தர்வன் பொண்டாட்டி உடனே அர்ஜுனன்கிட்டே போனாள். அர்ஜுனன் வீட்டுக்குள்ளே குடும்பத்தோட சந்தோஷமா உட்கார்ந்திருந்தார். கந்தர்வி போய் நமஸ்காரம் பண்ணினாள்! 'தீர்க்க சுமங்கலி பவ'ன்னு சொன்னார் அர்ஜுனன்.

'தப்பாச் சொல்லாதீங்கோ'ன்னா கந்தர்வி.

''ஏன் அப்படிச் சொல்றே''ன்னார் அர்ஜுனன்.

''இன்னிக்குச் சாயந்தரத்துக்குள்ள என் புருஷன் சாகப் போறான். எப்படி நான் தீர்க்கசுமங்கலியா இருக்க முடியும்'னு கேட்டாள் பதிலுக்கு.

'ஏம்மா என்ன நடந்தது?'ன்னு கேட்டார் அர்ஜுனன்.

நடந்தது நடந்தபடி சொன்னாள்.

'உன் புருஷனைக் கூப்பிடு'ன்னு அர்ஜுனன் சொல்ல, கந்தர்வன் வந்து கைகட்டி நின்றான். 'தெரியாமல்தான் பண்ணினியா, இல்லே தெரிஞ்சே துப்பினியா கிருஷ்ணன் மேலே'ன்னு அதட்டினான் அர்ஜுனன்.

'தெரியாத பண்ணிட்டேன்'னு கந்தர்வன் அழுதான்.

'சரி, போ. என் வீட்டுக்குள்ளே போய் இருங்கோ'ன்னு அர்ஜுனன் அவாளுக்கு அடைக்கலம் கொடுத்தார்.

கிருஷ்ணர் இதுக்குள்ளே வில்லை எடுத்துண்டு கந்தர்வனைத் தேட ஆரம்பிச்சார். கந்தர்வன் அர்ஜுனன் வீட்டுக்குள்ளே இருக்கிறதைத் தெரிஞ்சுண்டார். 'அர்ஜுனா, அவனை வெளியே அனுப்பு. அவனைக் கொல்லணும்னு சபதம் போட்டிருக்கேன்'னார் கிருஷ்ணர். 'மன்னிக்கணும். அனுப்ப முடியாது. நான் அவனைக் காப்பாத்தறதா வாக்குக் குடுத்துட்டேன்'னார் அர்ஜுனன்.

'நான் கொல்லப் போறேன்னு தெரிஞ்ச பிறகுமா?'ன்னார் கிருஷ்ணர்.

'ஆமா'ன்னார் அர்ஜுனன்.

'அப்படியா? முடிஞ்சா காப்பாத்து'ன்னு வில் வளைச்சு அம்பு போட ஆரம்பிச்சார். அர்ஜுனனும் காண்டபம் வளைச்சுச் சண்டை போட்டார். சின்னச் சண்டையா ஆரம்பிச்சது பெரிய அஸ்திரங்கள் வரைக்கும் போச்சு. ஊரே நெருப்புப் புடிச்சு எரிஞ்சுது. ஜனங்கள் தவிக்க ஆரம்பிச்சா.

நாரதர் ஓடிவந்தார். 'எதுக்குச் சண்டை, எதுக்குச் சண்டை? கொஞ்ச நேரம் நிறுத்துங்கோ'ன்னு கதறினார். சண்டை நின்றது. காரணம் கேட்டார். இரண்டு பேரும் அவரவர்கள் கட்சியைச் சொன்னா.

'இவ்வளவுதானே.. இந்தக் கந்தர்வன் தலை உங்க கால்ல விழணும். அவ்வளவுதானே.. டேய், இங்க வாடா'ன்னு கந்தர்வனைக் கூப்பிட்டார். பயந்தபடி கந்தர்வன் வந்தான்.

'போய் கிருஷ்ணர் கால்ல விழு'ன்னு சொன்னார். விழுந்தான்.

'இப்ப அவன் தலை உங்க கால்லே விழுந்துடுத்து. போறுமா'ன்னார் நாரதர்.

கிருஷ்ணர், 'போறும்'னார்.

ஜனங்களுக்கெல்லாம் அப்பாடான்னு நிம்மதியாயிடுத்து.

'எதுக்கு இந்தச் சண்டையை ஆரம்பிச்சே கிருஷ்ணா'ன்னு சகாதேவன் கேட்டான்.

அர்ஜுனன் ரொம்ப நல்லவன்னு ஊருக்குக் காட்டறதுக்கும், ஒரு பெரிய யுத்தம் வரப் போகிறதே அதுக்கு அர்ஜுனன் தயாரா இருக்கானான்னு தெரிஞ்சுக்கறதுக்கும் செய்தேன்'னார். கிருஷ்ணர்.

'என்ன தெரிஞ்சுது இப்ப'ன்னு கேட்டான் சகாதேவன்.

அர்ஜுனன் ரொம்ப நல்லவன். யார் அழுது உதவி கேட்டாலும் மனசு பொறுக்காது சரின்னுடுவான். அதே சமயம் என்னையே எதிர்த்துத் திணற அடிக்கிற சக்தி இருக்கறவன்'னார் கிருஷ்ணர்.

எல்லா ஜனங்களும் அர்ஜுனனைத் தலையில் வைச்சுப் பாராட்டினா.

கந்தர்வர்கள் ரெண்டு பேரும் கிருஷ்ணரையும் அர்ஜுனனையும் நமஸ்காரம் பண்ணிட்டுப் பறந்து போயிட்டா. கதை முடிந்தது....'' அம்மா பிள்ளையை உலுக்கினாள்.

''கத்தரிக்காய் காய்த்தது'' பிள்ளை முனகிச் சொல்லி விட்டுத் தூங்கிப் போயிற்று. கனவில் அர்ஜுனனைத் தேடிற்று.

''வலிமையும் வீரமும் தயையும் உள்ள புருஷனே என்னைக் காப்பாயாக. என் மரண பயத்தை நீக்குவாயாக. என் அச்சத்தை உன் நாண் ஒலி கொண்டு நீக்குவாயாக.. அர்ஜுனா, குந்தியின் மைந்தனே...'' என்று சுலோகம் சொல்லிற்று.

அன்று சொன்ன பிரார்த்தனைதான் இன்றும் மனத்தில் ஓடுகிறது. எதற்கு அர்ஜுனன் என்று கேட்கத் தெரியாமல் என் வில் எங்கே என்று தேடாமல் என் பயத்தை நானே போக்குவேன் என்று யோசிக்கத் தெரியாமல் சங்கடம் வந்தபோதெல்லாம் சரண் அடைய ஆள் தேடிற்று.

முரளி அம்மா வளர்த்த பிள்ளை.

விதவை வளர்த்த குழந்தை.

''வில் வாங்கித் தர மாட்டேன். கண்ணைக் குத்தும்'' அம்மா ஒரே வார்த்தையில் அடக்கி விடுவாள். ரொம்ப அழுத பிறகு நெட்டியில் செய்து எகிறுகிற சேவல் வாங்கிக் கொடுத்தாள்.

மயிலாப்பூர் அறுபத்து மூவர் உற்சவத்தில் சுண்டி விட்டால் எகிறும் சேவலும் சிவப்பு மிட்டாயும் வாங்கி வந்த முரளி இன்னும் மனத்தில் இருக்கிறான். சிவுக் சிவுக் என்று அந்த நெட்டிச் சேவல் எகிறும். ஒரே குச்சியில் எகிறி எகிறி விழும். வேகமாய்ச் சுண்ட நெட்டிச் சேவல் குச்சியின் உச்சியில் உரசக் காகிதம் கிழிந்து தரையில் வந்து விழுந்தது.

''அரை நாழில உடைச்சுட்டியா... உனக்கு இனி ஒண்ணும் வாங்கித் தரமாட்டேன்,'' அம்மா இரைந்தாள். அந்த நெட்டிச் சேவல் வெகுநாள் சுவாமி படத்துக்கு அருகில் இருந்தது. அப்புறம் தலை வேறு, உடல் வேறாகப் பிய்ந்து விடக் குப்பைக்குப் போயிற்று.

இன்றைக்குத் தானும் ஒரு நெட்டிச் சேவல் பொம்மைதான். லலிதா சுண்டி விடச் சுண்டி விடக் குதித்துக் கொண்டிருந்தவன்தான். சுண்டு வேகமாய்ப் போய்விட நெட்டிச் சேவல் காகிதம் பிய்ந்து தரைக்கு வந்துவிட்டது.

அம்மா... அம்மா... எனக்கு ஏன் வில் வாங்கித் தராமல் போனே... வளைச்சுக் குறி பார்த்து, பத்து வயசுப் பையன் ஏன் அம்பு அடிக்கக் கூடாதுன்னு சொன்னே?

யார் காலிலயாவது விழற கதை...

துள்ளிக் குதிக்கிற நெட்டிப் பொம்மை... இப்படி ஏன் வளர்த்தே...?

வளர்த்தது கூடப் பிசகில்லை. வளர்த்த பிள்ளையை வகை தெரியாமல் திருமணம் செய்து கொடுத்ததுதான் பிசகு.

அம்மாவுக்குத் தெரியவில்லை. என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை.

''என் பேரு சங்கரன். உங்க பையனை என். பொண்ணுக்குக் கேட்க வந்திருக்கேன்.''

''யாரென்றே தெரியலையே.''

''மேஜர் சங்கரன்னு அபிராமபுரத்தில் எல்லாரும் சொல்லிடுவா. விசாரிச்சுப் பாருங்க. எனக்கு ஜாதகம் பார்க்கிறதுலே நம்பிக்கை இல்லே. உங்களுக்கு இருக்கலாம். அதனால் கொண்டு வந்திருக்கேன். இது ஜாதகம். பெண் பார்க்க வரேளா?''

''மேஜர்னு...''

''மிலிட்ரி உத்தியோகம். பிரிட்டிஷ்காரன் மிலிட்ரில உத்தியோகம். அந்த மிலிட்ரியே வேறே... இப்ப இங்கே இருக்கிற மாதிரி தொத்தல் இல்லே.

அம்மாவுக்கு எதுவும் புரியவில்லை.

''பிராமணன்தானே...?'' குழந்தையாய்க் கேள்வி கேட்டாள்.

வந்தவர் மென்று விழுங்கினார். என்னடா என்பதைப் போல் முரளியைப் பார்த்தார்.

''ஆமாம்மா... திருநெல்வேலி பூர்வீகம்''

''எங்களுக்குத் தஞ்சாவூர் பூர்வீகம்.'' அம்மா சம்பந்தமில்லாமல் பதில் சொன்னாள்.

''இருக்கட்டும். ஊரா முக்கியம். நான் திருநெல்வேலி பார்த்து நாற்பது வருஷம் ஆச்சு. ஹவாய், ருமேனியான்னு உலகம் பூராச் சுத்தினவன். ஊர்ப் பாசமே விட்டுப் போச்சு. பாம்பேல கொஞ்ச நாள் இருந்தேன். ரிடையரான பிறகு மெட்ராஸ் வந்தேன். ஒரே பெண். பேர் லலிதா. பெண் பார்க்க வரேளா...?''

''ஹவாய் போயிருக்கேளா சார்...?'' வந்தவரை உற்சாகப்படுத்த முரளி கேள்வி கேட்டான்.

''ஓ எஸ்... பேர்ல் ஹார்பர் கேள்விப்பட்டிருக்கியா. நைன்டீன் ஃபார்ட்டி ஒன்... ஜப்பான் குண்டு போட்டு நாசம் பண்றச்சே நான் பேர்ல் ஹார்பர்லே இருந்தேன். டிசம்பர் மாசம் ஏழாம் தேதி. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தி ஒண்ணு...'' பெண் பார்க்கிற யோசனை மறந்து இரண்டாவது உலக யுத்தக் கதை ஆரம்பித்தது.

முரளி அவர் சொல்வதை வியப்போடு கேட்டுக் கொண்டிருந்தான்.

அம்மா கவலைப்பட்டாள்!

(தொடரும்)

''தெருக் குழாயைத் திறந்து வைக்க அமைச்சர் வரேன்னுட்டார்; ஆனா ஒரு கண்டிஷன்....''

''என்னவாம்....?''

''குழாயில் வரும் அந்த ஒரு குடம் தண்ணியை அவரே கொண்டு போய்டு வாராம்!''

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா





ஒருத்தரைப் போல் ஒருத்தர் நிறம் இருத்தல் இல்லை.

## பொருத்தமளிக்க உமக்கென்றே 3 வித வண்ணச் சாயல்களில் வருவது லக்மே காலமைன் ஒன்றே.

நேச்சுரல்
—மாநிற
மேனியருக்கு




லைட்
—சிகப்பு
மேனியருக்கு




கோல்டு
—கருவண்ண
மேனியருக்கு




லக்மே காலமைன் ஒன்றுதான்
மூவித வண்ணச் சாயல்களில்
மோகனமாய் வருகுது:
நேச்சுரல், லைட், கோல்டு, இதில்
உமக்கொன்று சேர்த்தி,
ஒருங்கிணைய நேர்த்தி-எண்ணிலா
வண்ண மேனியரை இனம்பிரித்து
உணருதே லக்மே. இன்மணமுடன்
மேனிமீது இலகுவாய் இழையும்
லக்மே காலமைன் —தனிநிற
உரிமையைத் தருகுது உமக்கு.
பரிட்சார்த்தப் பேக்காகவும்
கிடைக்குது பதம்பார்க்க வசதியாக

# லக்மே காலமைன்

சரும வண்ணம் எவ்வண்ணம்
சாயலுண்டு அவ் வண்ணம்.

TM

# "எப்படி முன்னேறும் உங்கள் மாவட்டம்?"



**இந்த மாவட்டச் சுற்றுப் பயணத்தின்போது, இராமநாதபுரம் தொகுதி எம்.எல்.ஏ.வும் வணிக வரித் துறை அமைச்சருமான டி. இராமசாமியை இராமநாதபுரத்திலுள்ள அவரது இல்லத்தில் சந்தித்தோம்.....**

"கடந்த ஒரு வார காலமாக நாங்கள் உங்கள் இராமநாதபுரம் மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்தோம். எங்கு பார்த்தாலும் வறட்சியின் கோர தாண்டவம். விரல் விட்டு எண்ணக் கூடிய ஒரு சில இடங்களைத் தவிர மற்ற இடங்களில் கிடைக்கும் குடிநீரைக் குடிக்கவே முடியவில்லை. ஏதோ நேரடியாகக் கடல் தண்ணீரைக் குடிப்பது போல்தான் இருக்கிறது. அப்படியொரு உப்பு! நீங்கள் எப்படிச் சமாளிக்கிறீர்கள்?"

"என்ன செய்வது? நாங்கள் இந்த மாவட்டத்திலேயே பிறந்துவிட்டோம். வேறு வழி? எங்களுக்குப் பழகிப் போனது."

"இருக்கலாம். இருந்தாலும் இந்த மாவட்ட மக்களுக்கு நல்ல குடிநீர் வழங்கப்பட வேண்டும் என்பதில், உங்களுக்கும் மாற்றுக் கருத்து இருக்க முடியாது என்று நினைக்கிறோம்..."

"உண்மை. இந்த ஆண்டுதான் வறட்சியின் கொடுமை அதிகமாக இருக்கிறது. அதையெல்லாம் புரட்சித் தலைவர் அரசு சமாளித்துக் கொண்டுதான் இருக்கிறது..."

"வறட்சி என்பது இராமநாதபுரம் மாவட்டத்தைப் பொறுத்தவரை கூடப் பிறந்த மாதிரி ஆகிவிட்டது. எனவே, ஒரு நிரந்தரத் தீர்வுக்கு வழி காண வேண்டாமா?"

"அதற்காகத்தான் வேறு எந்த அரசும் செய்யாத ஒன்றை — இராமநாதபுரம் மாவட்டத்தைத் தனியாகப் பிரித்ததைப் புரட்சித் தலைவர் செய்திருக்கிறார்."

"மாவட்ட எல்லைகளைப்பிரிப்பதுமட்டுமே அந்த மாவட்டங்களின் வளர்ச்சியாகிவிட முடியாது."

"முதலில் பிரிக்க வேண்டும். அதன் பிறகு தானே வளர்ச்சியடைய முடியும்! இப்போது பிரிக்கப்பட்டுவிட்டது. இனி வளர்ச்சியடையும்."

"இராமநாதபுரம் மாவட்டம் பிரிக்கப்பட்டு மூன்றாண்டுகள் ஆகிவிட்டன. இந்த மூன்றாண்டு காலத்தில் அடைந்த வளர்ச்சி என்னவென்று சொல்ல முடியுமா?"

"இராமநாதபுரத்தில் வீட்டு மனைகளின் விலையைக் கேட்டுப் பாருங்கள். முன்பிருந்ததைவிட இப்போது அதிகமாகிவிட்டன. இது வளர்ச்சியில்லையா?"

"ஓர் ஊர் மாவட்டத் தலைநகராகும்போது ஏற்படும் சாதாரண விளைவுதான் இந்த வீட்டு மனைகளின் விலை உயர்வு என்பது. சரியான குடிநீர் வசதி கூட இல்லையே என்பதுதான் எங்கள் கேள்வி...."

"பக்கத்திலிருக்கும் பொட்டிதட்டி, இருமேனி ஆகிய இடங்களிலிருந்து இராமநாதபுரம் நகருக்குக் குடிநீர் கொண்டு வரப் பட இருக்கிறது. அத்திட்டம் முழுமையாக முடிவடைந்துவிட்டால் இராமநாதபுரம் நகர் குடிநீர்ப் பிரச்னை தீர்ந்துவிடும்."

"மாவட்டம் முழுமைக்கும் என்ன

செய்யப் போகிறீர்கள்? சாட்டிலைட் மூலம் எடுக்கப்பட்ட புகைப்படங்களிலிருந்து இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள முதுகுளத்தூர், கமுதி போன்ற பகுதிகளில் நல்ல நிலத்தடி நீர் கிடைக்க வாய்ப்பிருப்பதாக நிபுணர்கள் சொல்கிறார்களே, அது பற்றி ஏதாவது திட்டங்கள் உள்ளனவா?''

''சாட்டிலைட் படங்கள் பற்றிய விஷயங்கள் ஏதும் எனக்குத் தெரியாது.''

''இராமநாதபுரம் மாவட்ட வறட்சி என்பது உலகறிந்த விஷயம். இந்நிலையில் அம்மக்களுக்கு வேலை வாய்ப்பளிக்கும்படியான பெரிய தொழிற்சாலைகள் ஏதும் இல்லையே? இதை அரசுதானே செய்ய வேண்டும்?''

''காங்கிரஸ் காலத்திலேயே மண்டபம் பகுதியில் ஒரு சிமெண்ட் தொழிற்சாலை அமைக்கும் திட்டம் இருந்தது. ஆனால், மக்களோ சிமெண்ட் தொழிற்சாலைப் புகையால் தென்னை மரங்கள் பாதிக்கப்படும் என்று தடுத்துவிட்டார்கள். என்ன செய்வது?

''சிமெண்ட் தொழிற்சாலை போகட்டும். இராமநாதபுரம் மாவட்டத்தில் அதிகம் விளையும் தென்னை, பனை தொடர்பான தொழில்களையாவது பெருமளவில் அபிவிருத்தி செய்யலாமில்லையா?''

''என்ன செய்யலாம் என்கிறீர்கள்?''

''உதாரணமாக, இப்போது இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள பல பகுதிகளில் வசிக்கும் மக்கள், பனை ஓலைகளைக் கொண்டு பாய் முடைந்து விற்றுத்தான் ஜீவனம் செய்து கொண்டுள்ளார்கள். அந்த ஓலைகள் வெல்லம், கருவாடு போன்றவற்றைப் பார்சல் செய்யப் பயன்படுகின்றன. டெக்ஸ்டைல் மில்களிலும் துணிகளைப் பார்சல் செய்வதற்குப் பயன்படுத்துகிறார்கள். இதை ஊக்குவித்தால் இன்னும் பல மக்கள் பயனடைவார்கள். ஆனால் அரசு என்ன செய்கிறது? அரசு சம்பந்தப்பட்ட டெக்ஸ்டைல் மில்களில் கூட இப்போது பனை ஓலைகளில் பார்சல் செய்வதை விட்டுவிட்டுப் பாலிதீன் பேப்பர்களில் செய்கிறார்கள். இதை மாற்றலாமே? அப்படி மாற்றினால் இன்னும் சில லட்ச ரூபாய்களுக்குப் பனை ஓலை விற்பனை அதிகரிக்கும் என்கிறார்கள்!''

''இந்த விஷயம் இதுவரை எனக்குத் தெரியவில்லை. இப்போதுதான் தெரிகிறது.''

''இதேபோல்தான் தென்னை மட்டைகளும்! இங்குள்ள தென்னை மட்டைகளை வெளி மாவட்டங்களிலுள்ளவர்கள் வாங்கிச் சென்று கயிற்றுத் தொழிற்சாலைகளுக்குப் பயன்படுத்துகிறார்கள். அதை ஏன் இராமநாதபுரத்திலேயே செய்யக் கூடாது? அதனால் சில ஆயிரம் பேருக்காவது வேலை வாய்ப்புக் கிடைக்குமே?''

''இது பற்றியும் எனக்கு அவ்வளவாகத் தெரியாது. நிச்சயம் புரட்சித் தலைவர் அரசு மக்களுக்கு நன்மைகள் செய்யும் திட்டங்களையே வகுக்கும். நான் ஆரம்ப காலத்திலிருந்தே புரட்சித் தலைவரின் தொண்டன்.''

''இருங்கள். ஆனால் குறைந்தபட்சம் இராமநாதபுரம் மாவட்டத்தில் கிடைக்கும் மூலப் பொருள்களையெல்லாம் மாவட்டத்துக்குள்ளேயே முழுமையாகப் பயன்படுத்தும் திட்டங்களைத் தீட்டலாம் அல்லவா? அதைக் கூடச் செய்யாதபோது, மக்களுக்கு எப்படி அரசாங்கத்தின் மீது நம்பிக்கை வரும்?''

''புரட்சித் தலைவர் கண்டிப்பாகச் செய்வார். இன்னும் இரண்டே ஆண்டுகளில் இராமநாதபுரம் மாவட்டம் பொன்கொழிக்கும் பூமியாகப் போவதைப் பார்க்கத்தான் போகிறீர்கள்....''

''இப்போது என்ன செய்யப்பட்டிருக்கிறது என்பதுதான் கேள்வி?''

''மண்டபம் பகுதியில் பாலியஸ்டர் தொழிற்சாலை ஒன்று தொடங்கப்படவுள்ளது. நாற்பது லட்சம் ரூபாய் எல்.ஐ.சி. கடனுதவியுடன் குடிநீர்த் திட்டம் ஒன்று செயல்படப் போகிறது. இருபத்து நான்கு லட்சம் செலவில் மண்டபம் யூனியனில் மல்லிகைப் பூ தொடர்பான ஆராய்ச்சி மையம் ஒன்று தொடங்கப்படவுள்ளது...''

''எல்லாவற்றுக்குமே நாம் திட்டங்கள் வைத்திருப்பதென்னவோ உண்மைதான். ஆனால் அவையெல்லாம் செயல்படுத்தப்பட வேண்டாமா?''

''நிச்சயம் செயல்படுத்தப்படும். இன்னும் இரண்டாண்டுகளில் வந்து பாருங்கள்...''

''கண்டிப்பாக வந்து பார்ப்போம். ஆனால், மாவட்டம் பிரிக்கப்பட்ட மூன்றாண்டுகளுக்குள்ளாகவே மூன்று கலெக்டர்கள் மாற்றப்பட்டு, இப்போது நான்காவது கலெக்டரும் வரப் போகிறார். இது மாவட்ட வளர்ச்சிக்குத் தடை அல்லவா?''

''ஒருபோதும் இல்லை. கலெக்டர் மாறுவதால் எந்த வேலையும் பாதிக்கப்படாது.''

''ஒரு கலெக்டர், அந்த மாவட்டத்திலுள்ள முழுமையும் அறிந்து கொண்டு, மக்களைப் புரிந்து கொண்டு செயல்படக் குறைந்தபட்சம் ஓராண்டு காலமாவது ஆகும். இந்நிலையில் ஓராண்டுக்குள்ளாகவே அவர் மாற்றப்பட்டால், வேறொருவர் வந்து அவ்வேலைகளைத் தொடரத் தாமதம்தானே ஆகும்? மக்களும் இதைத்தான் சொல்கிறார்கள். இவ்விஷயத்தில் இராமநாதபுரம் மாவட்ட மக்கள் அரசின்மேல் மிகவும் அதிருப்தியடைந்திருக்கிறார்கள்.....''

''..............''

''இப்போதைய கலெக்டர் நிபேந்திரநாத் சாரங்கி மாற்றப்பட்டதற்குக் கூட அரசியல் குறுக்கீடுகள்தான் காரணம் என்கிறார்களே, உண்மைதானா?''

''.... டீ சாப்பிடுங்கள். ஆறிவிடப் போகிறது.....''

''ஒரு மாவட்டக் கலெக்டரைக் குறைந்த

பட்சம் மூன்றாண்டு காலமாவது மாற்றாமல் இருந்தால்தான் அம்மாவட்ட மக்கள் அவர் மூலம் பயன் பெற முடியும் என்பதை அரசு புரிந்து கொள்வது நல்லது. அதுவும் இப்போதைய கலெக்டரான திபேந்திரநாத் சாரங்கி பற்றி மாவட்ட மக்கள் மிக நல்ல அபிப்ராயம் வைத்திருக்கிறார்கள். இந்நிலையில் அவர் மாற்றப்பட்டதில் மக்கள் மட்டுமின்றி அ.இ.அ.தி.மு.க.வினர்கூட அதிருப்தி தான் தெரிவிக்கிறார்கள். சரி, மண்டபம் இலங்கைத் தமிழர் அகதிகள் முகாமில் வழங்கப்படும் ரேஷன் அளவுகள் சரி வர இல்லை என்கிறார்களே....?''

''முன்பு சிலர் அப்படிச் செய்தது உண்மை தான். அவர்களைக் கண்டு பிடித்துத் தண்டித்திருக்கிறோம். இப்போது அப்படி இல்லை.''

''இப்போதும் அப்படித்தான் வழங்கப் படுவதாகச் சொல்கிறார்கள்...''

''நிச்சயமாக இல்லை. எல்லாம் சரியான அளவுகளில்தான் வழங்கப்படுகின்றன.''

எல்லாம் சரியாக இருக்கும் ஒரு நிலையில், எதற்காகப் பத்திரிகையாளர்களை மண்டபம் முகாமுக்குள் அனுமதிக்க மறுக்க வேண்டும்?''

''சில பத்திரிகையாளர்கள் வேண்டுமென்றே புரட்சித் தலைவர் அரசின் மேல் களங்கம் கற்பித்து எழுதத் துடிக்கின்றனர். அதற்காகத்தான் நாங்கள் பத்திரிகையாளர்களை அனுமதிப்பதில்லை.''

''அப்படியானால் முன்பு மண்டபம் முகாம் பற்றிப் பத்திரிகைகளில் எழுதப்பட்ட குறைகளெல்லாம் பொய்தான் என்கிறீர்களா?''

''நான் எல்லாப் பத்திரிகைகளையும் அப்படிச் சொல்லவில்லை. நிஜமான குறைகளுக்குத் தீர்வு கண்டுவிட்டோம். இப்போது ஒரு பிரச்னையும் இல்லை.''

''ரேஷன் அளவுகளில் இப்போதும் குறைகள் இருப்பதாகத்தான் சொல்கிறார்கள்.''

அதை அவ்வப்போது சரி பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம்.''

''இராமநாதபுரம் மாவட்டத்தில், மாணிக்கவாசகரால் பாடல் பெற்ற தலமான திருஉத்திரகோச மங்கை, இராமபிரான் தர்ப்ப சயனம் கொண்டிருக்கும் இருப்புல்லாணி, இராமர் வழிபட்டதாகச் சொல்லப்படும் நப பாஷாணச் சிலைகளைக் கொண்ட தேவிப்பட்டினம், திருவாடானை, நயினார் கோவில், ஏர்வாடி தர்கா என்று பல புண்ணியத் தலங்கள் இருக்கின்றன. ஆனால் இராமேஸ்வரத்திற்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவமும் விளம்பரமும் மற்றவற்றுக்குக் கொடுக்கப்படுவதில்லை. மற்றவற்றின் சிறப்புக்களையும் பிரபலப்படுத்தினால் பக்தர்களைக் கவரலாம் அல்லவா?

''செய்யத்தான் போகிறோம். அதற்காகத் தானே புரட்சித் தலைவர் அவர்கள் மாவட்டத்தைப் பிரித்தார்.''

கடைசியாக ஒன்று. மிகவும் வறட்சியான — பின்தங்கிய மாவட்டமான இராமநாதபுரத்தைச் சேர்ந்தவர் என்கிற முறையில், மாவட்ட வளர்ச்சிக்கு நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்?''

''மக்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்பதற்காக ஏற்பட்டதுதான் புரட்சித் தலைவர் அரசு. அதில் நான் ஆரம்பத்திலிருந்தே, புரட்சித் தலைவரின் தொண்டனாக இருக்கிறேன். நான் மறுபடியும் சொல்கிறேன். இன்னும் இரண்டாண்டுகள் கழித்து வந்து பாருங்கள். அப்போது இராமநாதபுரம் மாவட்டம் பொன் கொழிக்கும் பூமியாக இருக்கிறதா இல்லையா என்று!''

''கண்டிப்பாக வந்து பார்க்கத்தான் போகிறோம். அப்போது நீங்கள் அமைச்சராக இருந்தாலும் இல்லாமல் போனாலும் உங்களையும் வந்து சந்திக்கத்தான் போகிறோம். நன்றி. வணக்கம்.''

சந்திப்பு: **இளங்கோவன்**

---

''அந்த நடிகையைப் பத்தி நாம கெகெ போட்டதுக்குத் திட்டிட்டுப் போறாங்களாமே, ஏன்?''

''அவங்க பேரை ரொம்பச் சுற்றி வளைத்துப் போட்டுட்டோமாம். அதுக்குத்தான்.''

— இறை அ. கதிர்வேல்






''பொருட் காட்சிக்குப் போனேனே என்ன தெரிஞ்சுக்கிட்டேன்?''

''வெளியில் இருக்கும் விலைவாசி ஒண்ணும் அவ்வளவு மோசமில்லைன்னு தெரிஞ்சுக்கிட்டேன்!''

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

# விஸ்ட்ரம்

ஒரு டயபடிக் உணவு







நீரிழிவுக்காரர்களுக்கென்றே பிரத்யோகமாக வடிவமைக்கப்பட்டது.

சோர்வை நீக்கி, சக்தியை கொடுத்து தெம்பை ஊட்டுகின்றது

கொழுப்புச் சத்து சிறிதும் இல்லாதது

முழுவதும் தானிய, பருப்பு வகைகளால் ஆனது

செயற்கை வண்ணமோ, மணமோ, ருசியோ சேர்க்கப்படாதது இயற்கை தந்த பாதுகாப்புடன் அளிக்கப்படுகிறது

ஸ்பென்ஸர்ஸ், சிந்தாமணி, நீல்கிரீஸ் மற்றும் எல்லா மருந்துக் கடைகளிலும், டிபார்ட்மெண்டல் கடைகளிலும் கிடைக்கும்.



# பொன்னியின்

## அத்தியாயம் 32

## பரிசோதனை

சின்னப் பழுவேட்டரையரைக் கண்டதும் வந்தியத் தேவன் சண்டையை நிறுத்தி விட்டு அவரை நோக்கி நடந்தான். காவலர்கள் எழுந்து ஓடி வந்து அவனைப் பிடித்துக் கொண்டார்கள். அவர்களை அவன் சிறிதும் இலட்சியம் செய்யாமல் நாலு அடி முன்னால் நடந்து வந்து, ''தளபதி! நல்ல சமயத்தில் தாங்கள் வந்து சேர்ந்தீர்கள். இந்தப் பக்காத் திருடர்கள் என்னுடைய உடைமைகளைத் திருடிக் கொண்டதுமல்லாமல், என்னையும் கொல்லப் பார்த்தார்கள்! விருந்தாளியை இப்படித்தானா நடத்துவது? இதுவா தஞ்சாவூர் சம்பிரதாயம்? நான் தங்களுக்கு மட்டும் விருந்தாளியல்ல; சக்கரவர்த்திக்கும் விருந்தாளி; சக்கரவர்த்தினி சொன்னதைத்தான் தாங்களும் கேட்டீர்களே! பட்டத்து இளவரசரிடமிருந்து ஓலை கொண்டு வந்த தூதன். அப்படிப்பட்ட என்னை இந்தப் பாடுபடுத்துகிறவர்கள் மற்றவர்களை என்ன செய்துவிட மாட்டார்கள்! இப்படிப்பட்ட திருடர்களைத் தங்கள் பணி ஆட்களாக வைத்துக் கொண்டிருப்பது பற்றி ஆச்சரியப்படுகிறேன். எங்கள் தொண்டை மண்டலத்தில் இப்படிப்பட்ட திருடர்களை உடனே கழுவில் ஏற்றிவிட்டு மறுகாரியம் பார்ப்போம்!'' என்று சரமாரியாய்ப் பொழிந்தான்.

மூன்று வீரர்களை ஏக காலத்தில் எதிர்த்துப் புரட்டிக்கீழே தள்ளிய வாலிபனுடைய வீரச் செயலைப் பற்றிய வியப்பு இன்னும் பழு

அமரர் கல்கி

# செல்வன்

வேட்டரையரின் மனத்தை விட்டகல
வில்லை. இத்தகைய வீரனை நாம் நமது
காவற்படையில் சேர்த்துக்கொள்ள வேண்
டும் என்னும் ஆசை அவருக்கு அதிக
மாயிற்று. எனவே, அவர் சாந்தமான குர
லில் ''பொறு! தம்பி! பொறு! அப்படி
யெல்லாம் இவர்கள் செய்திருப்பார்கள்
என்று தோன்றவில்லை! இவர்களை விசாரித்
துப் பார்க்கிறேன்!'' என்றார்.

''நான் கோருவதும் அதுதான்! இவர்
களை விசாரியுங்கள்! விசாரித்து நீதி வழங்
குங்கள்! என்னுடைய உடையும் உடைமை
யும் என்னிடம் திரும்பி வருவதற்கு ஏற்
பாடு செய்யுங்கள்!'' என்றான் வல்ல
வரையன்.

''அடே! அந்தப் பிள்ளையை விட்டு
விட்டு இப்படி
வாருங்கள்! நான்
சொன்னது என்ன?
நீங்கள் செய்தது
என்ன? இவன் மீது
ஏன் கை வைத்தீர்
கள்?'' என்று கோப
மாகக் கேட்டார்
கோட்டைத் தள
பதி.

''எஜமானே!
தாங்கள் சொன்
னது சொன்னபடி
யே செய்தோம்.
இவரை எண்ணெய்
முழுக்காட்டிப்
புதிய ஆடைகளை
யும் ஆபரணங்களை
யும் அணிவித்
தோம். அறுசுவை
உண்டி அளித்
தோம். சித்திர மண்
டபத்துக்கும்
அழைத்து வந்
தோம்! இவர் சிறிது
நேரம் சித்திர மண்ட
பத்தில் உள்ள சித்
திரங்களைப் பார்த்
துக் கொண்டிருந்



தார். திடீரென்று நினைத்துக்கொண்டு இவருடைய பழைய உடைகளைக் கேட்டார். உடனே எங்களைத் தாக்கவும் ஆரம்பித்தார்!'' என்றான் அவ்வீரர்களில் ஒருவன்.

''ஒரு சிறு பிள்ளையிடமா மூன்று தடியர்கள் அடிபட்டு விழுந்தீர்கள்?'' என்று கூறி இரத்தக் கனல் வீச விழித்துப் பார்த்தார்.

''எஜமான்! அரண்மனை விருந்தாளியாயிற்றே என்று யோசித்தோம். இப்போது சற்று அனுமதி கொடுங்கள்; இவனை உடனே வேலை தீர்த்து விடுகிறோம்.''

''போதும் உங்கள் வீரப் பிரதாபம்! நிறுத்துங்கள்! தம்பி....! நீ என்ன சொல்லுகிறாய்?''

''இவர்களுக்கு அனுமதி கொடுங்கள் என்றுதான் சொல்கிறேன். எனக்கும் அனுமதி கொடுங்கள். சோழ குலத்துப் பகைவர்களோடு போராடிக் கொஞ்ச நாள் ஆயிற்று. தோள்கள் தினவெடுக்கின்றன. அரண்மனை விருந்தாளிகளை எப்படி நடத்த வேண்டுமென்று இவர்களுக்குப் பாடம் கற்பிக்கிறேன்!'' என்றான் நமது வீரன்!

சின்னப் பழுவேட்டரையர் புன்னகை புரிந்து, ''தம்பி! உன் தோள் தினவைத் தீர்த்துக் கொள்வதைச் சோழப் பகைவர்களோடேயே வைத்துக் கொள்! சக்கரவர்த்தி நோய்ப்பட்டிருக்கும் நிலையில் தஞ்சைக் கோட்டைக்குள் இவ்விதச் சண்டை, சந்தடி ஒன்றும் உதவாது என்று கட்டளை!'' என்று சொன்னார்.

''அப்படியானால் என்னுடைய உடைகளையும் உடைமைகளையும் உடனே கொண்டு வந்து கொடுக்கச் சொல்லுங்கள்!''

''எங்கேடா அவை?''

''எஜமான்! தங்கள் கட்டளைப்படி பத்திரப்படுத்தி வைத்திருக்கிறோம்.''

''தளபதி! இவர்கள் எப்படிப் புளுகுகிறார்கள், பாருங்கள்! சற்று முன் உடைகளை வெளுக்கப் போட்டிருப்பதாய்ச் சொன்னார்கள். இப்போது தாங்கள் 'பத்திரப்படுத்தி' வைக்கச் சொன்னதாகக் கூறுகிறார்கள். சற்றுப் போனால் தங்களுக்கே திருட்டுப்பட்டம் கூடக் கட்டி விடுவார்கள்!'' என்றான் வந்தியத்தேவன்.

ளபதி காவலர்களைப் பார்த்து, ''முட்டாள்களா! இந்தப் பிள்ளைக்குப் புது உடைகள் கொடுக்கும்படி மட்டுந்தானே சொன்னேன்? பழையவைகளைப் பற்றி நான் ஒன்றுமே சொல்லவில்லையே....? இந்த மூடர்கள் என்னவோ உளறுகிறார்கள், தம்பி! போனால் போகட்டும்; பழைய உடையைப் பற்றி எதற்காக இவ்வளவு கவலைப்படுகிறாய்? அதற்குள் ஏதாவது உயர்ந்த பொருள் வைத்திருந்தாயோ?'' என்று கேட்டார்.

''ஆம்; வழிநடைச் செலவுக்காகப் பொற்காசுகள் வைத்திருந்தேன்...'' என்று வந்தியத் தேவன் சொல்வதற்குள், ''அதற்காக நீ கவலைப்பட வேண்டாம். உனக்கு வழிச் செலவுக்கு எவ்வளவு பொன் வேண்டுமோ அவ்வளவு தருகிறேன்!'' என்றார் பழுவேட்டரையர்.

''தளபதி! நான் இளவரசர் கரிகாலருடைய தூதன். பிறரிடம் கை நீட்டிப் பணம் பெறும் வழக்கம் என்னிடம் கிடையாது.....''

''அப்படியானால், உன்னுடைய உடைகளையும் அதற்குள்ளிருந்த பொற்காசுகளையும் திருப்பி உன்னிடம் சேர்ப்பிக்கச் செய்கிறேன். கவலைப்படாதே! உன் உடையில் வேறு பொருள் ஒன்றும் இல்லையல்லவா?''

வல்லவரையன் ஒருகணம் யோசித்தான். அந்தத் தயக்கத்தைச் சின்னப் பழுவேட்டரையரும் பார்த்துக் கொண்டார்.

''வேறொரு முக்கியமான பொருளும் என் அரைச் சுற்று ஆடையில் இருக்கிறது. அதை உங்கள் ஆட்கள் தொட்டிருக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன். தொட்டிருந்தால் அவர்கள் தொலைந்தார்கள்....!''

''ஆகா! உனக்கு எத்தனை கோபம் வருகிறது? எங்கே, யாரிடத்தில் பேசுகிறோம் என்பதை மறந்துவிட்டே பேசுகிறாய். சிறு பிள்ளையாயிற்றே என்று மன்னித்து விடுகிறேன். அப்படிப்பட்ட பொருள் என்ன?''

"தளபதி! அதைச் சொல்வதற்கு இல்லை. அது அந்தரங்க விஷயம்!"

"தஞ்சைக் கோட்டைக்குள் எனக்குத் தெரியாத அந்தரங்கம் ஒன்றும் இருக்க முடியாது!"

"இளவரசர் கரிகாலர் என்னிடம் ஒப்புவித்த அந்தரங்க விஷயம்.

"இளவரசர் வடதிசையின் மாதண்ட நாயகர். அவருடைய அதிகாரம் பாலாற்றுக்கு வடக்கே செல்லும். இங்கே சக்கரவர்த்தியின் அதிகாரந்தான் செல்லும்!"

"தளபதி! புலிக் கொடி பறக்கும் இடமெல்லாம் சக்கரவர்த்தியின் அதிகாரந்தான். அதில் என்ன சந்தேகம்?"

"ஆகையினால்தான், இந்தக் கோட்டைக்குள்ளே எனக்குத் தெரியாத அந்தரங்கம் எதுவும் இருக்க முடியாது என்று சொல்லுகிறேன். சக்கரவர்த்தியின் க்ஷேமத்தைக் கருதித்தான்!"

"தளபதி! சக்கரவர்த்தியைக் கண்ணுங் கருத்துமாய்க் காப்பாற்றி வருவதற்காகத் தங்களுக்கும் பெரிய பழுவேட்டரையருக்கும் சோழ சாம்ராஜ்யம் நன்றிக் கடன் பட்டிருக்கிறது. இன்றைக்குச் சக்கரவர்த்தி தங்களைப் பாராட்டியதும் என் காதில் விழுந்தது. தங்களுக்குப் பயந்து கொண்டுதான் யமன் தஞ்சைக் கோட்டைக்குள் புகுந்து வராமல் தயங்கிக் கொண்டிருக்கிறான் என்று சக்கரவர்த்தி சொன்னாரே? அது எவ்வளவு பொருள் பொதிந்த வார்த்தை!"

"ஆம், தம்பி! பழையாறையிலிருந்து சக்கரவர்த்தியை நாங்கள் இங்கே அழைத்து வந்து கட்டுக் காவலுக்குள் வைத்திராவிட்டால், இத்தனை நாளும் என்ன விபரீதம் நடந்திருக்குமோ, தெரியாது. பாண்டிய நாட்டுச் சதிகாரர்களின் நோக்கம் நிறைவேறியிருந்தாலும் இருக்கலாம்."

"ஆ! தாங்கள் கூட அவ்விதமே சொல்கிறீர்களே!- அப்படியானால் நான் கேள்விப்பட்டது உண்மையாகத்தான் இருக்க வேண்டும்."

"என்ன கேள்விப்பட்டாய்?"

"சக்கரவர்த்திக்கு விரோதமாக ஒரு சதி நடக்கிறதென்றும் சக்கரவர்த்தியின் திருக் குமாரர்களுக்கு விரோதமாக இன்னொரு சதி நடக்கிறதென்றும் கேள்விப்பட்டேன்."


ன்னப் பழுவேட்டரையர் தம் வஜ்ரப் பற்களினால் உதட்டைக் கடித்துக் கொண்டார். இந்தச் சிறு அறியாப் பையனுடன் பேச்சுக் கொடுத்ததில் தமக்கே இத்தனை நேரமும் தோல்வி என்பதை உணர்ந்தார். ஏறக்குறைய அவனுடைய குற்றச்சாட்டுகளுக்குத் தாம் பதில் சொல்லிச் சமாளிக்கும் நிலைமைக்கு வந்துவிட்டது! எனவே, பேச்சை அத்துடன் வெட்டி விட விரும்பினார்.

"உனக்கென்ன அதைப் பற்றிக் கவலை? எல்லாச் சதிகளையும் உடைத்துச் சோழ குலத்தைப் பாதுகாக்க நாங்கள் இருக்கிறோம். உன்னுடைய கோரிக்கையைச் சொல்லு. உன் பழைய ஆடைகள் உனக்கு வேண்டும்; அவ்வளவுதானே!" என்றார்.

"என் பழைய ஆடைகளும் வேண்டும்; அவற்றுக்குள் இருந்த பொருள்களும் வேண்டும்."

"என்ன பொருள்கள் என்று இன்னமும் நீ சொல்லவில்லையே?"

"சொல்லத்தான் வேண்டுமானால் சொல்லுகிறேன். அதன் பொறுப்பு தங்களைச் சார்ந்தது. இளவரசர் சக்கரவர்த்திக்குக் கொடுத்திருந்த ஓலையைத் தவிர இன்னொரு ஓலையும் என்னிடம் கொடுத்திருந்தார்...."

"இன்னொரு ஓலையா! யாருக்கு? நீ சொல்லவே இல்லையே!"

"அந்தரங்கமானபடியால் சொல்லவில்லை; நீங்கள் இப்போது வற்புறுத்துகிறபடியால் சொல்லுகிறேன். பழையாறையிலுள்ள இளைய பிராட்டி குந்தவை தேவிக்கு இளவரசர் ஓலை ஒன்று கொடுத்தார்....!"

"ஓஹோ! அப்படியானால், நாளைக்குச் சக்கரவர்த்தி கொடுக்கும் திருமுகத்தை நீ உடனே எடுத்துக் கொண்டு காஞ்சிக்குப் போக முடியாது. இளைய பிராட்டிக்கு இளவரசர் ஓலை அனுப்பும்படி இப்போது என்ன அவசரம் நேர்ந்ததோ?"

"தளபதி! நான் பிறருக்கு எழுதப்படும் ஓலையைப் படிப்பதில்லை. சக்கரவர்த்தியின் ஓலையைப் படித்தது போல் இதையும் நீங்கள் படிப்பதில் எனக்கு

ஒன்றும் ஆட்சேபம் கிடையாது. அந்தப் பொறுப்பு தங்களுடையது. என் உடையிலிருந்த பொன்னும் ஓலையும் களவு போகாமல் என்னிடம் திரும்பி வந்தால் போதும்.''

''அதைப் பற்றிப் பயம் வேண்டாம். நானே பார்த்து எடுத்து வருகிறேன்'' என்று சின்னப் பழுவேட்டரையர் நடந்தார். அவர் பின்னோடு வந்தியத்தேவனும் தொடர்ந்தான். அதையறிந்த கோட்டைத் தளபதி கண்களினால் சமிக்ஞை செய்யவே ஐந்தாறு வேல் பிடித்த வீரர்கள் வந்து வாசற்படியண்டே குறுக்கே நின்றார்கள். அவர்களுடன் சண்டை பிடிப்பதில் அனுகூலம் ஒன்றுமில்லையென்று கருதி வந்தியத்தேவன் அங்கேயே நின்றான்.

சற்று நேரத்துக்கெல்லாம் சின்னப் பழுவேட்டரையர் திரும்பி வந்தார். அவருக்குப் பின்னால் ஒருவன் ஒரு தட்டில் சீர் வரிசை ஏந்திக் கொண்டு வருவது போல் வந்தியத்தேவனுடைய பழைய ஆடைகளை எடுத்து வந்தான்.

''தம்பி! இதோ உன் ஆடைகள் பத்திரமாயிருக்கின்றன. நன்றாகச் சோதனை செய்து பார்த்துக் கொள்!'' என்றார் கோட்டைத் தளபதி.

அவ்விதமே வந்தியத் தேவன் சோதனை செய்து பார்த்தான். அரைச் சுற்றுச் சுருளில் அவன் வைத்திருந்ததைக் காட்டிலும் அதிகமாகப் பொற்காசுகள் இருந்தன. குந்தவை தேவியிடம் சேர்ப்பிக்க வேண்டிய ஓலையும் இருந்தது. அதிக பொற்காசுகள் எப்படி வந்தன? முதலில் அவன் தேடிப் பார்த்தபோது இல்லாத ஓலை இப்போது எப்படி வந்தது? சின்னப் பழுவேட்டரையரிடம் அது அகப்பட்டிருக்க வேண்டும். அதைப் பார்த்துவிட்டு இப்போது திரும்பி வந்த பிறகு அவர் அந்த ஓலையைத் திரும்பச் செருகியிருக்க வேண்டும்! எதற்காக இப்படிச் செய்திருக்கிறார்? பொற்காசுகள் எதற்காக அதிகம் வைத்திருக்கிறார்? பொல்லாத மனிதர் இவர்! இன்னும் எப்படியெல்லாம் தன்னைச் சோதிக்கப் போகிறாரோ, தெரியாது! இவரிடம் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். ஏமாந்து போகக் கூடாது!

''எல்லாம் சரியாயிருக்கிறதா, தம்பி! நீ கொண்டு வந்த பொன், பொருள் எல்லாம்?'' என்று சின்னப் பழுவேட்டரையர் கேட்டார்.

''இதோ பார்த்துச் சொல்கிறேன்'' என்று கூறி வந்தியத்தேவன் பொற்காசுகளை எண்ணினான். அதிகப்படி காசுகளை எடுத்துத் தனியாகப் பழுவேட்டரையர் முன்பு வைத்துவிட்டு, ''தளபதி! வாணர் குலத்தில் பிறந்தவன் நான்; ஆதித்த கரிகாலரின் தூதன்; பிறர் பொருளுக்கு ஆசைப்படுவதில்லை!'' என்றான்.

''உன்னுடைய நேர்மையை மிக மெச்சுகிறேன். ஆயினும் உன்னுடைய வழிச் செலவுக்கு இதை நீ வைத்துக் கொள்ளலாம்! எப்போது புறப்படவிரும்புகிறாய்? இன்றைக்கே புறப்படுகிறாயா? அல்லது இன்றிரவு தங்கி இளைப்பாறிவிட்டு, பெரியவரையும் பார்த்துவிட்டுப் போகிறாயா?'' என்று கேட்டார் தளபதி.

''அவசியம் இன்றிரவு இங்கே தங்கிப் பெரிய பழுவேட்டரையரையும் தரிசித்து விட்டுத்தான் போக எண்ணியிருக்கிறேன். ஆனால் உங்கள் ஆட்களிடம் மட்டும் கொஞ்சம் சொல்லி வையுங்கள்; என் பொருள்களில் கை வைக்க வேண்டாம் என்று!'' — இவ்விதம் சொல்லிக் கொண்டே அதிகப்படியாயிருந்த பொற்காசுகளையும் வந்தியத்தேவன் எடுத்துத் துணிச் சுருளில் பத்திரப்படுத்திக் கொண்டான்.

''மிக்க சந்தோஷம். உனக்கு இங்கே எந்தவிதமான இடைஞ்சல்களும் இனிமேல் இராது. உனக்கு என்ன வேண்டுமோ, தாராளமாய்க் கேட்டுப் பெற்றுக் கொள்ளலாம்.''

''தளபதி! இந்தத் தஞ்சை நகரைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசையாயிருக்கிறது. பார்க்கலாம் அல்லவா?''

''தாராளமாகப் பார்க்கலாம். இதோ இவர்கள் இருவரும் உன்னோடு

வந்து கோட்டைக்குள் எல்லா இடங்களையும் காட்டுவார்கள். கோட்டைக்கு வெளியில் மட்டும் போக வேண்டாம். சாயங்காலம் கோட்டைக் கதவுகளைச் சாத்தி விடுவார்கள்! வெளியில் போய்விட்டால் திரும்பி இரவு வர முடியாது. கோட்டைக்குள்ளே உன் விருப்பப்படி சுற்றி அலையலாம்!'' — இவ்விதம் கூறி விட்டு இரண்டு புதிய ஆட்களைச் சின்னப் பழுவேட்டரையர் தன் அருகில் அழைத்து அவர்களிடம் மெதுவாக ஏதோ சொன்னார். அவர் சொன்னது என்னவாயிருக்கும் என்று வந்தியத்தேவன் ஒருவாறு ஊகித்துத் தெரிந்து கொண்டான்.



# அத்தியாயம் 33

## மரத்தில் ஒரு மங்கை

கோட்டைத் தளபதியின் இரு ஆட்களும் தன் இரண்டு பக்கத்தில் வர, வந்தியத் தேவன் தஞ்சைக் கோட்டையைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டான். தான் தப்பித்து ஓடிவிடாமல் பார்த்துக் கொள்ளவே அவர்கள் தன்னுடன் வருகிறார்கள் என்பதைப் பற்றி அவனுக்குச் சந்தேகம் இருக்கவில்லை. கோட்டை வாசல் வழியாக வெளியே யாரையும் போக விடாமல் பார்த்துக் கொள்ளும்படி கட்டளை பிறந்திருக்கும் என்பதிலும் ஐயமில்லை. ஆனாலும் அவன் அன்று முன்னிரவுக்குள் தப்பித்துச் சென்றே தீர வேண்டும். பெரிய பழுவேட்டரையர் வந்துவிட்டால், பிறகு தப்பிச் செல்வது இயலாத காரியம்! உயிர் பிழைத்திருப்பதே முடியாத காரியமாகிவிடும்!

ஆகவே, தஞ்சாவூர்க் கோட்டைக்குள் வந்தியத் தேவன் அங்குமிங்கும் அலைந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தபோது அவனுடைய மனம் தப்பிச் செல்லும் வழிகளைப் பற்றி ஆலோசித்துக் கொண்டேயிருந்தது. முதலில் இந்த யம கிங்கரர்களிடமிருந்து தப்ப வேண்டும்; பின்னர், கோட்டையிலிருந்து தப்பிச் செல்ல வேண்டும். எப்படித் தப்புவது? அது தான் தெரியவில்லை.

பார்க்கப் போனால் இவர்களிடமிருந்து தப்புவது பெரிய காரியமில்லை. இரண்டு பேரையும் ஒரு விநாடி நேரத்தில் தாக்கிக் கீழே தள்ளிவிட்டு ஓடிவிடலாம். ஆனால் எங்கே ஓடுவது? தஞ்சைக் கோட்டையைப் பழுவேட்டரையர்கள் எவ்வளவு பலப்படுத்திக் கட்டியிருக்கிறார்கள் என்பது நாடறிந்த செய்தி. அவர்களுடைய அநுமதியின்றித் தஞ்சைக் கோட்டைக்குள் காற்றுக் கூட நுழைய முடியாது என்று ஜனங்கள் சொல்லுவார்கள். யமனும் வரமுடியாது என்று சக்கரவர்த்தியே இன்று காலையில் சொன்னார். அத்தகைய கோட்டையிலிருந்து எப்படிச் செல்வது? இந்த இருவரையும் தொட வேண்டியதுதான்; அவர்கள் உடனே கூச்சல் கிளப்பி விடுவார்கள். அடுத்த கணத்தில் தான் பாதாளச் சிறைக்குப் போக நேரிடும். அல்லது உயிரிழக்க நேரிடும். இவர்களைத் தாக்குவதில் பயனில்லை; தாக்காமல் தந்திரத்தினாலேயே தப்பிக்க வேண்டும். அப்படித் தப்பித்த பிறகு கோட்டையிலிருந்து வெளியேற வழி தேட வேண்டும். எவ்வளவு பலமான கோட்டையாயிருந்தாலும் இரகசியச் சுரங்க வழி இல்லாமற் போகாது. அதை எப்படிக் கண்டு பிடிப்பது? அது யாருக்குத் தெரிந்திருக்கும்? தெரிந்தவர்கள், யாரேனும் இருந்தாலும், தனக்குச் சொல்வார்களா?

இப்படிப் பலவகையாகச் சிந்தித்துக் கொண்டே நடந்தபோது, சட்டென்று பழுவூர் இளைய ராணியின் நினைவு வந்தது. ஆகா! அந்தக் கோட்டைக்குள் யாராவது தனக்கு உதவி செய்வதாயிருந்தால், அந்த மாதரசிதான் செய்யக்கூடும். அதுவும் சந்தேகந்தான். ஆனால் ஆழ்வார்க்கடியானின் பெயரைச் சொல்லி ஏதேனும் தந்திர மந்திரம் செய்து பார்க்கலாம். அப்படிப் பார்ப்பதற்கு முதலில் பெரிய பழுவேட்டரையரின் அரண்மனையைக் கண்டு பிடிக்க வேண்டும். கண்டு பிடித்தாலும், தான் அங்கே ராணியைப் பார்க்கச் செல்வது இந்தத் தடியர்களுக்குத் தெரியக் கூடாது. தெரிந்தால் இவர்கள் போய்ச் சின்னப் பழுவேட்டரையரிடம் சொல்லி விடுவார்கள். அதிலிருந்து என்ன விபரீதம் நேருமோ, யார் கண்டது? ஒருவேளை, பெரிய பழுவேட்டரையர் அரண்மனையில் இருக்கும்போது அவரே வந்து விட்டால் என்ன செய்வது? சிங்கத்

தின் குகைக்குள் நாமாகச் சென்று தலையைக் கொடுப்பது போல ஆகுமே?

வந்தியத் தேவனுடைய மனம் , சிந்தித்துக் கொண்டிருந்தபோது அவனுடைய வாயும் கண்களும் சும்மா இருந்து விடவில்லை. பின்னோடு வந்தவர்களை, "அது என்ன? இது என்ன?" "அது யார் அரண்மனை?" "இது யார் மாளிகை?" "இது என்ன கட்டடம்?" "அது என்ன கோபுரம்?" என்றெல்லாம் அவன் வாய் கேட்டுக் கொண்டேயிருந்தது. அவனுடைய காதுகள் "இது பெரிய பழுவேட்டரையர் அரண்மனை" அல்லது, "பழுவூர் இளைய ராணி அரண்மனை" என்ற மறுமொழி வருகிறதா என்று கூர்ந்து கவனித்துக் கொண்டேயிருந்தன. அவனுடைய கண்களோ, அப்புறமும் இப்புறமும் நாலாபுறமும் கவனமாகப் பார்த்துக் கொண்டு வந்தன. அப்படிப் பார்த்து வந்தபோது ஒரு விஷயம் அவன் கண்கள் வழியாக மனத்தில் நன்கு பதிந்தது. கோட்டைக்குள்ளே பிரதான வீதிகள் விசாலமாயும் ஜனப்போக்கு வரவு நிறைந்ததாயும் இருந்தபோதிலும் சந்து பொந்துகளும் ஏராளமாயிருந்தன. மரமடர்ந்த தோட்டங்களும் அதிகமாயிருந்தன. அந்தச் சந்து பொந்துகளின் வழியாகச் சென்று அடர்ந்த தோட்டங்களுக்குள் புகுந்து மறைந்து கொள்வது அசாத்தியமான காரியம் அல்ல. ஒரு நாள், இரண்டு நாள் கூடத் தலைமறைவாக இருப்பது சாத்தியந்தான். ஆனால் யாரும் பாராத சமயத்தில் மறைந்து கொள்ள வேண்டும்; யாரும் தேடாமலும் இருக்க வேண்டும். சின்னப் பழுவேட்டரையர் அவருடைய கணக்கற்ற ஆட்களைத் தேடுவதற்கு ஏவி விட்டால் மறைந்திருப்பது சாத்தியமல்ல. அல்லது யாருடைய வீட்டுக்குள்ளாவது புகுந்து அடைக்கலம் பெற வேண்டும். அம்மாதிரி தஞ்சைக் கோட்டைக்குள் தனக்கு அடைக்கலம் யார் கொடுப்பார்கள்? பழுவூர் ராணி கொடுத்தால்தான் கொடுத்தது. தன்



னுடைய கற்பனா சக்தியையெல்லாம் பிரயோகித்து அவளிடம் கதை கட்டிச் சொல்லி நம்பும்படி செய்ய வேண்டும். அதற்கு முதலில், இவர்களிடமிருந்து தப்பித்து நழுவ வேண்டும்...

"ஆகா! இது என்ன கோஷம்? இது என்ன ஆர்ப்பாட்டம்?—ஓ! இவ்வளவு கூட்டமாகப் போகிறார்களே இவர்கள் யார்? தெய்வமே! நீ என் பக்கத்தில் இருக்கிறாய் என்பதில் சந்தேகமில்லை. இதோ ஒரு வழி புலப்படுகிறது! இதோ ஒரு துணை தோன்றுகிறது....!

குறுக்கு வீதியில் ஒரு திருப்பத்துக்கு வந்ததும், பிரதான வீதி வழியாக ஒரு பெரிய கும்பல் வாத்திய கோஷ ஜய கோஷ முழக்கங்களுடன் போய்க் கொண்டிருந்ததைப் பார்த்து வந்தியத் தேவன் மேற்கண்டவாறு நினைத்தான். அந்தக் கும்பலில் சென்றவர்கள் வேளக்காரப் படையினர் என்பதைத் தெரிந்து கொண்டான். வழக்கம் போல் மகாராஜாவைத் தரிசனம் செய்துவிட்டு அவர்கள் கோட்டையை விட்டு வெளியேறுகின்றார்கள் போலும்! இந்தக் கூட்டத்தில் தா[illegible] கலந்துவிட்டால்....? ஆகா! தப்புவதற்கு இதைக் காட்டிலும் வேறு சிறந்த உபாயம் என்ன?"

பின்னோடு வருகிறவர்கள் அவ்வளவு சுலபத்தில் தன்னை விட்டுவிட மாட்டார்கள். தான் கூட்டத்தில் கலந்தால் அவர்களும் கூடத் தொடர்ந்து வருவார்கள். கோட்டை வாசல் வழியாக வெளியேறவும் எளிதாயிராது! வாசற் காவல் செய்வோர் அவ்வளவு ஏமாந்தவர்களாக இருந்து விடுவார்களா? தன்னைக் கண்டு பிடித்துத்

தடுத்து நிறுத்தி விட மாட்டார்களா...? ஆயினும் ஒரு பிரயத்தனம் செய்து பார்க்க வேண்டியதுதான். வேறு வழியில்லை. கடவுளே பார்த்துக் காட்டியிருக்கும் இந்த வழியை உபயோகித்துக் கொள்ளாவிட்டால் தன்னைப் போன்ற மூடன் வேறு யாரும் இல்லை.

வழக்கம்போல், பின்னோடு வந்தவர்களைப் பார்த்து, "இது என்ன கூட்டம்?" என்று வந்தியத்தேவன் கேட்டான். "வேளக்காரப் படை" என்று சொன்னதும், அந்தப் படையைப் பற்றிய விவரங்களைக் கேட்கலானான். அத்தகைய வீரப் படையில் தானும் சேர்ந்துவிட விரும்புவதாகவும், ஆகையால் நெருங்கிப் பார்க்க வேண்டுமென்றும் சொன்னான். இப்படியெல்லாம் பேசிக் கொண்டே வேளக்காரப்படையை அணுகினான். சிறிது நேரத்தில் "முன்னால் தாரை தப்பட்டை முழக்குகிறவர்களைப் பார்க்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே வேளக்காரப் படைக் கூட்டத்தில் கலந்துவிட்டான்.

கூட்டம் மேலே போகப் போக, இவனும் ஒரே இடத்தில் நில்லாமல் மேலும் கீழும் அப்பாலும் இப்பாலும் நகர்ந்து கொண்டிருந்தான். வேளக்காரப் படை வீரர்களைக் காட்டிலும் அதிக உற்சாகத்துடன் கோஷங்களைச் செய்தான். அவ்வீரர்களில் சிலர் இவனை உற்று உற்றுப் பார்த்தார்கள். "இவன் யார் பைத்தியக்காரன்?" என்ற பாவனையில் சிலர் பார்த்தார்கள். "மிதமிஞ்சி மதுபானம் செய்தவன் போலிருக்கிறது!" என்ற பாவனையில் சிலர் பார்த்தார்கள். ஆனால் யாரும் அவனைத் தடுக்கவோ, அப்புறப் படுத்தவோ முயலவில்லை.

அவனுடன் வந்த சின்னப் பழுவேட்டரையரின் ஆட்களோ, வேளக்காரப் படைக்குள் நுழையத் துணியவில்லை. "எப்படியும் அவன் வெளியில் வருவான். அப்போது மீண்டும் பற்றிக் கொள்ளலாம்" என்ற நம்பிக்கையுடன் வேளக்காரப் படையின் ஓரமாகச் சற்று விலகியே அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள்.

அச்சமயம் வீதியில் எதிர்ப்புறமாகத் தயிர்க் கூடையுடன் வந்து கொண்டிருந்த ஒரு ஸ்திரீ வேளக்காரப் படைக்கு ஒதுங்கி ஒரு சந்தில் நின்றாள். அந்த வீரர்களில் ஒருவன், "அம்மா! தாகமாயிருக்கிறது; கொஞ்சம் தயிர் தருகிறாயா?" என்று கேட்டான். அந்தப் பெண் நடுக்காக, "தயிர் இல்லை; கன்னத்தில் இரண்டு அறை வேணுமானால் தருகிறேன்!" என்றாள்.

அதைக் கேட்ட ஒரு வீரன், "ஓகோ! அதைத்தான் கொடுத்துவிட்டுப் போ!" என்று அந்தப் பெண்ணை அணுகிச் சென்றான். தயிர்க்காரப் பெண் பயந்து ஓடினாள். வீரன் அவளைத் தொடர்ந்து ஓடினான். அவளைப் பிடித்துக் கொண்டு வருவதற்காக இன்னும் இரண்டு வீரர்கள் ஓடினார்கள். ஓடியவர்கள் அனைவரும் தலைக்குத் தலை ஒவ்வொரு விதமாகக் கூச்சல் போட்டுக் கொண்டு ஓடிய படியால் விஷயம் என்னவென்பதே யாருக்கும் தெரியவில்லை. ஏதோ தமாஷ் என்று மட்டும் எல்லாரும் எண்ணினார்கள்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான் வல்லவரையன். அந்த ஒரு கணத்தில் அவன் மனத்திற்குள் தீர்மானத்துக்கு வந்துவிட்டான். தீர்மானிப்பதும் தீர்மானத்தைக் காரியத்தில் நிறைவேற்றுவதும் வந்தியத்தேவனுக்கு ஒன்றுதான் என்பதை நாம் ஏற்கெனவே பல முறை பார்த்திருக்கிறோம். தீர்மானித்த பிறகு தயங்குவதென்பது அவனுடைய இயற்கைக்கு விரோதமானது. எனவே, "ஓடு! ஓடு!" "பிடி! பிடி!" என்று கூவிக் கொண்டே வந்தியத்தேவனும், தயிர்க்காரப் பெண்ணைத் துரத்திக் கொண்டு ஓடியவர்களைத் தொடர்ந்து தானும் ஓடினான். அந்தப் பெண் சற்றுத் தூரம் ஓடி ஒரு குறுகிய சந்தில் திரும்பினாள். பின் தொடர்ந்து ஓடியவர்கள் அங்கே போய்ப் பார்த்தபோது தயிர்க்காரப்பெண்ணைக் காணவில்லை. மாயமாய் மறைந்து விட்டாள்! துரத்தி வந்த வீரர்களும் அவளைப் பற்றி அப்புறம் கவலைப்படவில்லை; திரும்பி விட்டார்கள். வந்தியத்தேவன் மட்டும் திரும்பவில்லை. அந்தப் பெண் புகுந்து சென்ற சந்து வழியாகவே மேலும் ஓடினான். இன்னும் இரண்டு மூன்று சந்துகள் புகுந்து திரும்பிய பிறகே ஓட்டத்தை நிறுத்தி மெதுவாக

நடக்கலுற்ருன்.

வேளக்காரப் படை சாதாரணமாகக் கோட்டையிலிருந்து வெளியேறும் நேரம் சூரியாஸ்தமன நேரம் அல்லவா? வந்தியத்தேவன் இப்போது புகுந்து சென்ற சந்துகளில் ஏற்கெனவே இருள் சூழ்ந்து விட்டது. இருபுறமும் சில இடங்களில் மதில் சுவராயிருந்தது. சில இடங்களில் செடி கொடிகள் அடர்ந்த வேலியாயிருந்தது. வந்தியத்தேவன் எங்கும் நிற்காமல் போய்க் கொண்டேயிருந்தான். திசையைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. பெரிய வீதிகளில் புகாமல் சந்து பொந்துகளின் வழியாகப் புகுந்து போனல் எப்படியும் கோட்டை வெளிச் சுவரை அடைந்தே தீரவேண்டும். கோட்டை வெளிச் சுவரை அடைந்த பிறகு என்ன செய்வது என்பதைப் பிறகு தீர்மானித்துக் கொள்ளலாம். யோசித்து யுக்திகள் கண்டு பிடிப்பதற்குத்தான் இரவெல்லாம் நேரம் இருக்கிறதே!

சற்று நேரத்துக்கெல்லாம் நன்ருக இருட்டி விட்டது. அவன் சென்ற பாதை கடைசியில் ஒரு மதில் சுவரில் வந்து முடிந்தது. இருட்டில் நடந்து வந்த வந்தியத்தேவன் அச் சுவரின் மேல் இலேசாக மோதிக் கொண்டான். சுவர் என்று மட்டும் தெரிந்தது. அது என்ன சுவர், எவ்வளவு உயரமான சுவர் என்பது ஒன்றும் தெரியவில்லை. அநேகமாக அது கோட்டை மதில் சுவராகவே இருக்கலாம். அப்படியானல் இங்கேயே உட்கார்ந்து விடுவதுதான் சரி. சிறிது நேரத்துக்கெல்லாம் சந்திர உதயம் ஆகும். அப்போது பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அதுவரை ஒளிந்திருப்பதற்கு இதை காட்டிலும் நல்ல இடம் இருக்க முடியாது. இத்தனை நேரம் சின்னப் பழுவேட்டரையரின் ஆட்கள் திரும்பிப் போய்ச் சொல்லியிருப்பார்கள். கோட்டைத் தளபதி தன்னுடைய ஆட்களை நாலா புறமும் ஏவியிருப்பார். ஒருவேளை



வேளக்காரப் படையுடன்தான் வெளியேறியிருக்கலாம் என்றும் சந்தேகித்திருப்பார். கோட்டைக்கு உள்ளேயும் வெளியிலேயும் தன்னைத் தேடிக் கொண்டிருப்பார்கள். தேடட்டும்; தேடட்டும்; நன்ருய்த் தேடட்டும். அவர்களையெல்லாம் ஏமாற்றிவிட்டு நான் இக்கோட்டையை விட்டுத் தப்பித்துச் செல்லாவிட்டால் நான் வாணர் குலத்தவன் அல்ல! என் பெயரும் வந்தியத்தேவன் அல்ல!

ஆனல் சந்திரன் உதயமாகி நிலா அடிக்கத் தொடங்கிவிட்டால் பழுவேட்டரையர் ஆட்களுக்கும் வசதியாகப்போய்விடும். தன்னைத் தேடி இங்கே வந்தாலும் வந்துவிடுவார்கள். வந்தால் வரட்டும்; தாராளமாய் வரட்டும்; இந்த அடர்ந்த தோப்புகளுக்குள் ஒளிந்துகொண்டால் யார்தான் தேடிக் கண்டுபிடிக்க முடியும்?......

இப்படி எண்ணிக் கொண்டே சுவரின் மீது சாய்ந்து கொண்டு, வந்தியத் தேவன் உட்கார்ந்தான். இளம்பிள்ளையாதலாலும் பகலெல்லாம் அலைந்து களைத்திருந்தபடியாலும் கண்ணைச் சுழற்றிக் கொண்டு தூக்கம் வந்தது. மேலக்காற்றில் மரக்கிளைகள் அடி ஒன்றோடொன்று உராய்ந்து

உண்டாக்கிய சத்தம் தாலாட்டுப் பாடலைப்போல் மயக்கத்தை உண்டு பண்ணியது. அப்படியே தூங்கிவிட்டான்.

அவன் தூக்கம் நீங்கிக் கண்விழித்த போது சந்திரன் உதயமாகிக் கீழ்வானத்தில் சிறிது தூரம் மேலே வந்திருந்தது. அடர்ந்த மரக்கிளைகளின் வழியாக நிலா வெளிச்சம் வந்து சுற்றுப்புறக் காட்சிகளை அரைகுறையாக அவனுக்குக் காட்டியது. தனது நிலை என்னவென்பதை வந்தியத்தேவன் ஞாபகப்படுத்திக் கொண்டான். சுவரில் சாய்ந்தபடி தான் தூங்கிவிட்டது அவனுக்கு வியப்பை அளித்தது. அதைக் காட்டிலும் துயில் நீங்கி விழித்துக் கொண்டது ஆச்சரியம் அளித்தது. தன்னுடைய துயிலை நீக்கி விழிக்கச் செய்த காரணம் யாது? ஏதோ ஒரு குரல் கேட்டது போல் தோன்றியதே? அது மனிதக் குரலா? அல்லது விலங்கின் குரலா? அல்லது இரவில் விழித்திருக்கும் பறவையின் குரலா? — குரல் கேட்டது தான் உண்மையா?


ந்தியத்தேவன் அண்ணாந்து பார்த்தான். அரைகுறையான நிலா வெளிச்சத்தில் செங்குத்தான சுவர் தெரிந்தது. ஆ! இது கோட்டைச் சுவராயிருக்க முடியாது. கோட்டைச் சுவர் இன்னும் உயரமாயிருக்கும். ஒருவேளை வெளிக் கோட்டைச் சுவருக்குள்ளே இன்னொரு சிறியகோட்டைச்சுவராக இருக்குமோ? அல்லது பெரியதொரு அரண்மனைத் தோட்டத்தின் மதில் சுவரோ?

அண்ணாந்து பார்த்துக் கொண்டே வந்தியத்தேவன் எழுந்தான். ஒரு கணம் அவனுடைய இருதயத் துடிப்பு நின்று போயிற்று. வயிற்றிலுள்ள குடல் மேலே மார்பு வரை விம்மி வந்து அடைத்தது. அவ்வளவு பீதி உண்டாயிற்று. அதோ அந்த மதில் சுவருக்கு மேலேயுள்ள மரக்கிளையில் இருப்பது என்ன? மரங்களில் வசிக்கும் வேதாளம் என்னும் பிசாசைப் பற்றி அவன் கேட்டிருந்த கதைகள் பலவும் நினைவுக்கு வந்தன.

ஆனால் வேதாளம் பேசுமா? மனிதக் குரலில் பேசுமா? அதுவும் பெண்ணின் குரலில் பேசுமா? இந்த வேதாளம் அவ்வாறு பேசுகிறதே? என்ன சொல்கிறது என்று கேட்கலாம்.

''என்ன ஐயா! சுவரில் சாய்ந்தபடி தூங்கிவிட்டாயா? எத்தனை தடவை கூப்பிடுகிறது?''

ஆ! இது வேதாளம் அல்ல. மனித குலத்துப் பெண்மணிதான் பேசுகிறாள். மரக்கிளையின் மீது உட்கார்ந்திருப்பவள் ஒரு பெண்மணிதான்! இது என்ன கனவா? அல்லது உண்மையில் நடப்பதா?

''அழகுதான்! இன்னும் தூக்கம் கலையவில்லை போலிருக்கிறது. இதோ ஏணியை வைக்கிறேன். ஜாக்கிரதையாக ஏறி வா! கீழே விழுந்து தொலைக்காதே!''

இப்படிச் சொல்லிக் கொண்டே அப்பெண் சுவரின் உட்புறத்திலிருந்து மெல்லிய மூங்கிலினால் ஆன ஏணி ஒன்றை எடுத்து வெளிப்புறத்தில் சுவர் ஓரமாக வைத்தாள்.

வந்தியத் தேவனுக்கு ஒன்றும் விளங்கவில்லைதான்! ஆனாலும் இப்படிப்பட்ட அரிய சந்தர்ப்பத்தை — தன்னைத் தேடி வரும் சந்தர்ப்பத்தை அவன் விட்டு விடுவானா?

வருகிறது வரட்டும்; பிறகு நடப்பது நடக்கட்டும். இப்போது இந்த ஏணியில் ஏறலாம்; சுவரின் உச்சியை அடைந்த பிறகு மற்ற விவரங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

ஏணியில் முக்கால் பங்கு அவன் ஏறியபோது அந்தப் பெண் மறுபடியும், ''நல்ல தாமதக்காரன் நீ! அங்கே இளைய ராணியம்மாள் காத்துக் கொண்டிருக்கிறார்கள்! இங்கே நீ மதில் சுவரில் சாய்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறாய்!'' என்றாள். அப்போது ஏற்பட்ட அதிர்ச்சியினால் வந்தியத்தேவன் ஏணியிலிருந்து நழுவி விழுந்துவிட இருந்தான். நல்லவேளையாக, அங்கே சுவரில் நீட்டிக் கொண்டிருந்த கல்லைப் பிடித்துக் கொண்டு சமாளித்தான்.

இளையராணி என்றால், பழுவூர் இளையராணியாகத்தான் இருக்கும்? தான் இங்கே வந்து உட்கார்ந்திருப்பது

அவளுக்கு எப்படித் தெரிந்தது? மாய மந்திரம் ஏதோ அவள் அறிந்திருக்க வேண்டும்! தன்னைப் பார்ப்பதில் அவளுக்கு இவ்வளவு சிரத்தை ஏற்படக்காரணம் என்ன? ஒருவேளை — ஒருவேளை,—வேறு எவனுக்காகவோ வைத்த ஏணியில் நான் ஏறிவிட்டேனே! எப்படியிருந்தாலும் இருக்கட்டும்! முன் வைத்த காலைப் பின் வைக்க முடியாது! எல்லாம் சற்று நேரத்தில் தெரிந்து போய் விடுகிறது.

சுவரின் உச்சியருகில் வந்ததும் அவனுடைய கையைப் பிடித்து அந்தப் பெண் தூக்கிவிட்டாள். அப்போது நிலா வெளிச்சம் அவள் முகத்தில் அடித்தது. இதற்குள் ஆச்சரியப்படும் சக்தியையே வந்தியத்தேவன் இழந்து விட்டான். அதனால்தான் அவளுடைய முகம், வேளக்காரப் படையினர் துரத்திய தயிர்க்கூடைக்காரியின் முகம் போலத் தோன்றியும், அவன் சுவரிலிருந்து தவறிவிழவில்லை. இன்றிரவு இதற்குமேல் என்னென்ன வியப்பான நிகழ்ச்சிகள் நடந்தாலும் வியப்படைவதற்கு இடமில்லைதான்.

"ஊம்! ஏன் விழித்துக் கொண்டு சுவர்மேலே உட்கார்ந்திருக்கிறாய்? ஏணியை எடுத்து உள்ளே இறக்கி விட்டுக் குதி சீக்கிரம்!" என்று சொல்லிக் கொண்டே அந்தப் பெண் சரசரவென்று மரக்கிளையிலிருந்து கீழே இறங்கினாள்.

வந்தியத்தேவன் அவள் கூறிய வாறே செய்தான். அவன் இறங்கிய இடம் ஒரு விஸ்தாரமான தோட்டம் என்று தெரிந்தது. சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய அரண்மனையின் மாடகூட கோபுரங்களும் சிகரங்களும் மங்கிய நிலா வெளிச்சத்தில் சொப்பன உலகக் காட்சியைப் போல் தோன்றின.

அது யாருடைய அரண்மனை என்று கேட்பதற்காக . வந்தியத்தேவன் தொண்டையைக் கனைத்துக் கொண்டான். உடனே அந்தப் பெண், "உஷ்!" என்று சொல்லி உதட்டில் விரலை வைத்து எச்சரித்துவிட்டு முன்னால் நடந்தாள். வந்தியத்தேவன் அவளைத் தொடர்ந்து சென்றான்.

(தொடரும்)




# கல்கி

## விடுமுறை மலர் 1987

* அமரர் கல்கி

எழுதிய இலங்கைப் பயணக் கட்டுரை

* காத்தாடி ராமமூர்த்தி

தயாரிப்பில் மேடை நாடகம்

* புஷ்பா தங்கதுரை

வழங்கும் மர்ம நாவல்

* வண்ணத்தில் மிளிரும் —

மாலே தீவுகள்
சினிமா நட்சத்திரங்கள்
அரசியல் தலைவர்கள்
இசை வல்லுனர்கள்
விளையாட்டு வீரர்கள்
விண்வெளி சாகசங்கள்

* மற்றும் —

கோகுலம் பக்கங்கள்,
சிறுகதைகள், கவிதைகள், நகைச்சுவை அம்சங்கள், ஆன்மீக அற்புதங்கள்

* 320 பக்கங்கள் : : விலை ரூ 10/—

மே 15—ம் தேதி எல்லா கல்கி ஏஜெண்டுகளிடமும் கிடைக்கும். உங்கள் பிரதிக்கு உடனே பதிவு செய்து கொள்ளுங்கள். ரிஜிஸ்தர் தபாலில் பெற ரூ. 15/— அனுப்பவும்.




# காற்றுக்கு மூச்சுத் திணறல்!

கூர்ந்து பாருங்கள்! காற்றுக்கு ஏன் இந்த மூச்சுத் திணறல்? நமக்கு சுத்தக் காற்றைத் தந்து வாழ வைக்கும் இயற்கைக்கு நாம் தரும் கைம்மாறு இந்த தண்டனையா?

தூய காற்று மட்டும் இல்லாவிட்டால் இந்த அழகிய உலகில் நாம் உயிர் வாழவே முடியாது. நாம் இந்த தூய காற்றைப் பெற இயற்கையுடன், மரங்களும், காடுகளும் உதவுகின்றன.

ஆனால் மனிதன்....தன் சுயநலத்திற்காக காடுகளை அழித்தான். மரங்களை வெட்டினான்! ஆனால் மீண்டும் காடுகளை உருவாக்கவில்லை. விஞ்ஞான வளர்ச்சியின் வேகத்தை அதிகரித்தான்.
பலப்பல தொழிற்சாலைகளை நிறுவினான்!

பல மாடி கட்டிடங்களை உருவாக்கினான்!

வேகமாகச் செல்ல ஊர்திகளை அமைத்தான்!

ஆனால்....அவற்றால் ஏற்பட்ட அசுத்த நீரை, நச்சுக் காற்றை தூய்மைப்படுத்தத் தவறிவிட்டான். அதன் பலன்? காற்றிலே நச்சுப் பொருட்கள் கலந்தன! தூய நீர் அசுத்த நீராக மாறியது! தூய காற்றில் மாசு கலந்தது! நச்சுக் காற்றில் உலகம் வாழ முடியுமா?

சிந்தித்துப் பாருங்கள்!

நச்சுக் காற்று பரவினால்....மரங்கள் பட்டு விடும்! மழை குறையும். பெய்யும் மழையிலும் நஞ்சு கலக்கக் கூடும். எனவே நம் முன்னோர்கள் போல், நாமும் இயற்கையின் காவலர்களாக இருந்தால்தான், நாம் வாழ முடியும்; நமது வருங்கால சந்ததியும் வாழ முடியும் என்ற உண்மையை உணர்ந்து செயல்பட வேண்டும்.

இன்று பலர் இதை உணர்ந்துள்ளனர். போனது போக, இருப்பதைக் காத்து, காடுகளையும் மரங்களையும் பாதுகாக்க முன் வந்துள்ளனர். இப்பணிக்கு நீங்களும் உங்களது முழு ஒத்துழைப்பைத் தாருங்கள்

**சிந்திப்பீர்! செயல்படுவீர்!**

மரங்களை வளர்ப்பீர்!

மண்வளத்தை பாதுகாப்பீர்!

நீரை மாசுபடுத்தாதீர்!

சுற்றுப்புறத் தூய்மையைப் பாதுகாப்பீர்!

இதுவே நமது குறிக்கோளாக அமையட்டும்.

**தொழிற்சாலையிலிருந்து மாசு உண்டாக்கும் கழிவு நீரையும் நச்சுப் புகையையும் பொது இடங்களில் கலக்கவிடுவது சட்டப்படி குற்றமாகும்.**







வெளியிடுவோர்:
**சுற்றுப்புறத் தூய்மைக் கட்டுப்பாடுத் துறை**
**சென்னை 600 009**

DIPR/836/HS/87 AIYWAVE/DEPC/3159

# அம்மா எப்படிச் சம்மதித்தாள்?

## மும்தாஜ் யாசீன்

சுகந்தி சீக்கிரமே எழுந்து விட்டாள். குளித்தாள். ஈரக் கூந்தலுக்குத் துண்டைச் சுற்றிக் கொண்டு, வேலைக்கான உத்தரவுத் தாளை எடுத்தாள். அப்பாவின் படத்திற்கு முன்பு வைத்து நமஸ்கரித்தாள். தகரப் பெட்டியை நகர்த்தி, தனது உடுப்புக்களை எடுத்து அடுக்கும் போதுதான் தெரிந்தது – அம்மாவும் கூடவே வரப் போவது.

உற்சாகத்தை வழித்துவிட்ட மாதிரி இருந்தது.

அம்மாவா? அம்மா வந்து என்ன பண்ணுவாள்?

"இதாம்மா நான் வேலை பார்க்கப் போற ஆபீஸ்" –பஸ்ஸில் போகிற



போது காட்டலாம். இரட்டை மாடி பிரம் மாண்டத்தை, கண்ணாடிச் சுவரை, வண்ணப் பூஞ்செடிகளை, சில்லென்றவாசனைக்காற்றை நெஞ்சுக்குள் வாங்கி அதிசயிக்க வைக்க லாம். உன்னை அழைத்துப் போக முடியுமா?

ஆச்சரியம் விலகி, "தடித் தடியா இத் தனை ஆம்பிளைங்களா?" என்ற விகல்பம் தான் தெரியும் அவளுக்கு. "என்னடி... வேற பொண்ணுகளே காணோம். "நீ ஒருத்தி தானா?" என்ற கேள்விதான் எழும்பும். மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டுதான் ஊருக்குத் திரும்புவாள். அல்லது "வேணாம்டி அந்த உத்தியோகம். ஊருக்குப் போயி சாணி தட்டியாவது பிழைச்சுக்கலாம்" என்று கூப் பிட்டாலும் கூப்பிடுவாள்.

இதற்காகத்தானா மாமா இத்தனை அலேந் தது?

வேலை வாங்கியது?

"ரெண்டு நாள்ல வந்துருவேன். குழந்தை களையும் வீட்டையும் பாத்துக்க கோகி" என அத்தையிடம் சொல்லிக் கொண்டிருந்த வனைக் கூர்ந்து பார்த்தாள் சுகந்தி.

வித்தியாசம் தெரிந்தது.

மஞ்சள் பூசாவிட்டாலும் பளிச்சென்ற முகம். அழுத்தி வாரிய கொண்டை. விரல் தடிப்பில் நெற்றித் திருநீறு. சலவை உடுப்பு.

அப்பா போன பிறகு — இந்த ஆறு மாதத் தில் — அம்மாவைப் பழைய சுறுசுறுப்புடன் பார்ப்பது இதுதான் முதல் தடவை.

"நீயும் வர்றியாம்மா..." சந்தேகத்தை உறுதி செய்து கொள்ளக் கேட்டாள் சுகந்தி.

"ஆமாண்டி... உன்னைத் தனியா எப்படி அனுப்பறது? மனசு கேக்கலே!"

"மாமாதான் வர்றாரே அம்மா..."

"அவன் ஆம்பளை... என்ன தெரியும்! ஆபீஸ் எப்படி, தங்கற எடம் எப்படின்னு நான் பார்க்க வேணாமா?"

மேலே தொடர ஒன்றும் இல்லை.

அம்மா ஆரம்பித்த இடத்திற்கே மீண்டும் வருகிறாள் போலும்.

'அப்பாவின் காரியம் முடித்த போதும் இதே போலத்தான் சொன்னாள் — "இனி என்ன?" என்ற கேள்வியோடு வட்டமாக உட்கார்ந்த உறவுக்காரர்களிடம். "அவரு சோத்து சுகம் வச்சிட்டுப் போகலேங் கிறது வாஸ்தவம். வாரிசுக்கு வேலை உண்டுங்கிறதும் வாஸ்தவம். பொட்டை களாப் பெத்து வச்சிருக்கேனே. எப்படி அனுப்பறது? நாளைக்கு வராத பேரு வந்தி ருச்சுன்னா எங்க போயி சாகறது? சொல் லுங்க..."

அப்போதே கிடைத்திருக்க வேண்டிய வேலையை அதுதான் தள்ளிப் போட்டது.

மறுபடியுமா?

அம்மா ஐம்பது ஆண்டுகள் பின் தங்கிய மனுஷி. சின்ன ஊரில், வெளி அனுபவம் அற்ற மனிதர்களின் சின்ன உலகத்தில் தனக் கென ஓர் இடத்தை அமைத்துக் கொண்ட வள். ஆசாரம்தான் முக்கியம் அவளுக்கு. குனிந்த பார்வை. சத்தம் இல்லாத பேச்சு. உதட்டைத் தாண்டாத சிரிப்பு. அப்பா இல்லா விட்டால் சுகந்தி ஏட்டாங்கிளா ஸுக்கு மேல் தாண்டியிருக்க முடியாது. அவர்தான், "அது கெடக்குதுணைத்துத்தவளே. படிம்மா... எவ்வளவு முடியுதோ அவ்வள வுக்குப் படி" என உற்சாகப்படுத்தினார்.

அடுத்த தெருவில்தான் ஸ்கூல். விடவும், கூட்டிப் போகவும் அம்மா தானே வருவாள். வழியில் சிநேகிதிகள் 'ஹாய்' சொன்னா லும், வீட்டிற்கு வந்ததும் நூறு கேள்விகள். சந்தேகம்.

'அவ யாரு? என்ன பேரு?'

'எப்படிப் பழக்கம்?'

'சினிமாக்காரி மாதிரி வீதியில என்னடி சிரிப்பு?'

பள்ளி இறுதி வகுப்பு முடித்ததும் மாப் பிள்ளை பார்க்க ஆரம்பித்தாள். காலேஜுக்கு அப்ளிகேஷன் வாங்கி வந்ததைக் கிழித்துப் போட்டாள். "அப்பனும் பெண்ணும் ஏன் கூத்தடிக்கிறீங்க? வீட்டுப் பேச்சு வீதிக்கு வரணும்னு ஆசையாக்கும்."

அவளது ..ரகளையில் சுகந்திக்கு ஆசை அற்றுப் போயிற்று. "உன் யோசனை என் னம்மா?" என்ற அப்பாவிடம், "நான் படிக்க லேப்பா..." என்றாள். "அதுக்காக அம்மா சொல்றபடி இப்பவே கல்யாணப் பேச்சை யும் எடுக்காதீங்கப்பா..."

அப்பா தலையாட்டினார்.

அத்தருணத்தில் அவளுக்கு அப்படி யொரு அபிப்பிராயத்தை வெளியிட முடிந் தது. குடும்பத்திற்குக் கடவுள் அளித்த சலுகை என்பது, அப்பாவின் இழப்பிற்குப் பிறகுதான் தெரிந்தது.

இறுதிச் சடங்கிற்கு வந்த ஆபீஸ்காரர் கள், "பெரிய பொண்ணு என்ன படிச்சி ருக்கு?" என்றகேள்வியோடு, "இதுபோதும். விண்ணப்பம் அனுப்பச் சொல்லுங்க. வேலைக்கு ஏற்பாடு பண்ணலாம்" என்ற தகவலையும் சொல்லிவிட்டுப் போனார்கள்.

மாமா தான் மீண்டும் ஆரம்பித்தவர். "என்னக்கா சொல்றே? பெரிய ஆபீஸ். கௌ ரவமான வேலே. சம்பளம்னு ஏதோ வந்தா குடும்பம் நிம்மதியா இருக்கும்."

"வேலையில் கௌரவம் இருந்து என் னப்பா... குடும்பத்துக்கு வேணாமா?"

"இந்தக் காலத்துல இதெல்லாம் சக ஜம்க்கா. டவுன்ல எத்தனையோ பொண் ணுக..."

"இது டவுனும் இல்லே, நம்ம குடும்பமும் அப்படி இல்லே குமார்..."

"வயிறுன்னுஇருக்கேக்கா. சின்னஞ்சிறுசு களை வச்சுக்கிட்டு என்ன பண்ணுவே?"

என்ன செய்யலாம் என்ற யோசனையில் இரண்டு மாதம் ஓடியது. எதுவும் புலப் படாமல் கைக்காசு மெல்லமெல்லக் கரைய...

"என்னடி இவளே... கிடைக்கிறவேலையை ஏன் வேணாம்ங்கிறே? இந்த அளவுக்காவது கடவுள் வழி பண்ணினாரேன்னு சந்தோஷப் படாம..."

ஊராரும் கரைத்தார்கள்.

என்ன நடந்ததோ?'



"பத்து வருஷங்களுக்கு முந்தி நடந்த துப்பாக்கிச் சூடு சம்பவத்தை விசாரிச்ச விசாரணைக் கமிஷன் நீதிபதி இன்னைக்கு அறிக்கை வெளியிட்டிருக்காராமே... என்ன சொல்லியிருக்கார்?"

"துப்பாக்கிச் சூடு நடந்தது வாஸ்தவம் தான்னு உறுதியாச் சொல்லியிருக்கார்."

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

திடீரென ஒருநாள் மாமா வந்து சொன்ஞர். "இதான் அப்ளிகேஷன். வேலைக்கு எழுதிப் போடு சுகந்தி."

"அம்மா ஒத்துக்கணுமே மாமா..."

"அந்தக் கவலை உனக்கு வேணும்... முதல்ல எழுது."

வாங்கிக் கொண்டு போனார்.

அப்பா வேலை பார்த்த ஆபீஸுக்கு இரண்டு மூன்று தரம் போய் வந்தார். தெரிந்த சில 'புள்ளி'களின் வீடுகளுக்கு நடந்தார். கடிதங்கள் எழுதிப் போட்டார். பலன் கிடைத்தது —

முந்தா நாள் "ஸார்... போஸ்ட்" என வீட்டிற்குள் வந்து விழுந்த பழுப்பு உறையில் வேலைக்கான உத்தரவு. நாளைக்குச் சேர்ந்தாக வேண்டும். அம்மா வருவது எந்த வகையில் உதவும்? அவளது அபிப்பிராயம் என்ன என்று முழுவதுமாகத் தெரியாத நிலையில் எப்படிக் கூட்டிப் போவது? அங்கு வந்ததும் தனது பழைய பல்லவியை மீண்டும் பாட மாட்டாள் என்பது என்ன நிச்சயம்?

"எல்லாம் ரெடியா?" கையில் சூட்கேசுடன் மாமா உள்ளே நுழைந்தார்.

"ஆச்சு மாமா... அம்மாவும் வர்றதா திட்டமா?"

"ஆமாம்மா... ராத்திரிதான் முடிவாச்சு."

"அப்படியா?" சுகந்தி ஆச்சரியத்தை அடக்கியே வெளியிட்டாள்.

இதென்ன கஷ்ட காலம்? இவரும் உடந்தையா?

கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு, "சீக்கிரம்... நேரமாச்சு" என்றார் மாமா.

பஸ்ஸில் அப்படியொன்றும் கூட்டம் இல்லை. மாமா முன்னால் உட்கார்ந்து கொள்ள அம்மாவும், அவளும் பின் இருக்கையில்.

விர் விர்ரென்று விலகும் தார் ரோடு. வயல்கள். தென்னந்தோப்பு. விசுவிசுத்த ஜன்னல் காற்று...

டடமோ, பஸ்ஸோ புதியதுஇல்லை. அப்பா டவுனில் வேலை பார்த்தாலும் குடும்பத்தைக் கிராமத்தில்தான் வைத்திருந்தார். லீவு நாட்களில் வந்து கூட்டிப் போவது உண்டு. அது ஒரு காலம். ஓர் அனுபவம். அப்பாவானுலும் அம்மாவே ஆனாலும் அனுபவங்களின் மூலமாகத்தான் அறிந்து கொள்ள முடிகிறது. தனக்கு இப்படியெல்லாம் நேரக் கூடும் என்று யாராவது நினைத்திருக்க முடியுமா? நினைக்க முடியாததெல்லாம் நிகழ்வது தான் படைப்பின் சூட்சுமம் போலும்.

பஸ் ஏதோ ஓர் ஊரில் நின்றிருந்தது.

திமுதிமுவென்று முண்டியடித்துக் கொண்டு ஏறும் மனிதக் கும்பல். ஆணும் பெண்ணுமாய்...

அம்மா முகச் சுளிப்போடு அவர்களைக் கவனிப்பதைக் கண்ட சுகந்திக்குப் பழைய அனுபவம் ஒன்று ஞாபகத்திற்கு வந்தது.

அப்போது டவுனில் சர்க்கஸ் நடந்து கொண்டிருந்தது. அப்பா எல்லோரையும் வரச் சொல்லி எழுதி இருந்தார்.

பஸ்ஸில் இதே கூட்டம். உஷ்ண மூச்சு. வியர்வை நாற்றம்.

நின்று கொண்டு போன சுகந்தியின் முதுகுப்புறம் ஏதோ அடிக்கடி உரசியது. திரும்பிப் பார்த்தால், ஓர் அரும்பு மீசைக்காரன். அவள் திரும்பியதை ஆமோதிப்பாக நினைத்தானோ என்னவோ, சிரித்தான். பின்னும் நெருங்கினான்.

சுகந்தி சங்கடமாய் நெளிய, அம்மா கவனித்து விட்டாள்.

"யார்ரா அது...? ஆம்பளையா நீ! போடா அப்பாலே."

பஸ்ஸிலிருந்தவர்கள் பார்வை அவன் பக்கம் திரும்பியது.

"கண்டக்டர்.... பாருங்க, இந்த ஆளை. பொம்பளை பக்கத்துலே என்ன வேலைன்னு கேளுங்க..."

"யார்ப்பா அது? வண்டியை ஸ்டேஷனுக்கு விடணுமா?"

அரும்பு மீசை அரண்டு போனான். கூட்டம் பார்வையால் காறித் துப்ப தலை குனிந்து, ஒதுங்கி, சிக்னலுக்காக பஸ் நிற்க அவசரமாய் இறங்கி, மறைந்து போனான்.

"பொறுக்கி நாய்க... செருப்பாலே அடிக்கணும்..."

"விட்டிருக்கப்படாது சார் அவனை."

"இனி ஜென்மத்துக்கும் வாலாட்ட மாட்டான்."

ஆள் போன தைரியத்தில் அவரவர் பேச, அம்மாவின் முகத்தில் பெருமிதம்.

சுகந்திக்கு ஏனோ அவன் மீது பரிதாபமாக இருந்தது.

பஸ் நிலையத்திற்கு அப்பா வந்திருந்தார். முதல் வேலையாக அம்மா அவனைப் பற்றிச் சொல்ல அப்பா சிரித்தார்.

"இதெல்லாம் சகஜம்ங்கிற அளவுக்கு இங்க பழகிப் போயிருச்சு. அப்படிக் கத்தி ரகளை பண்ணி இருக்க வேணும். தெரியாம செஞ்சுட்டான். தனியாச் சொல்லிக் கண்டிச்சிருக்கலாம்..."

அந்தத் தருணத்தில் அப்பாவை ரொம்பவும் பிடித்தது சுகந்திக்கு.



''வேலைக்கேற்ற ஊதியம் கொடுன்னு போராட்டம்செஞ்சது தப்பாப் போச்சு.''

''ஏன்?''

''ஊதியத்தைக் குறைச்சுட்டாங்க...!''

— கிழை அ. கதிர்வேல்

அம்மாவுக்குஏன் அந்தத்தாராளம்இல்லை?

''இந்த அக்கிரமத்தை சகஜம்ங்கிற ஆம்பளைகிட்டஎன்ன சொல்றது? காலம்கெட்டுக் கெடக்கு. புள்ளைகளை எங்கூட ஊரோடு வச்சிருக்கிறது எவ்வளவோ நல்லதாப் போச்சு...'' என்றாள் அவள்.

உடம்பைப்புனிதம்என்று நினைக்கிறாளா? உடலுக்கு நேருகிற சங்கதிகள்தான் வாழ்க்கையை நிர்ணயிக்கிறது என்பதுதான் அவளது அபிப்பிராயமா?

இப்போது மட்டும் தன்னைத் தனியே வேலைக்கு அனுப்ப எப்படி இசைந்தாள்?

பஸ் இன்னும் புறப்படுவதாக இல்லை. கண்டக்டரையும் டிரைவரையும் காணவில்லை. பயணிகள் கூட ஏறுவதும் இறங்குவதுமாக இருந்தார்கள்.

மாமா நெட்டி முறித்தார்.

''இவ்ளோ நேரமாச்சு. எப்பக் கௌம்பும்னு தெரியலையே....?''

இன்னார் என்று இல்லாமல் பொதுவாகச் சொல்ல, எதிர் வரிசையில் இருந்த கூலிங் கிளாஸ் பையன், ''டிபன் சாப்பிடப் போயிருக்காங்க. பத்து நிமிஷம் ஆகும்'' என்றான். தான் சொன்ன அரிய தகவலுக்காகச் சுகந்தியை ஒருதரம் பார்த்துக் கொண்டான்.

''இறங்குங்க.. நாமும் ஒரு காப்பி சாப்பிடலாம்'' என்றார் மாமா.

''எனக்கு வேணாம். நீங்க போய்ட்டு வாங்க'' என்றாள் அம்மா.

மாமாவும் அவளும் எழுந்திருக்க, சிறிது இடைவெளி விட்டுப் பின்னாலேயே கூலிங் கிளாஸும் இறங்கினான்.

ஜன்னலோரத்தில் அம்மாவின் தலை தங்களை நோக்குவது தெரிந்தது சுகந்திக்கு.

அம்மா கற்பனாவாதி. யதார்த்தத்தை விட்டு விலகி, தனது பார்வையில் மட்டுமே உலகைக் காணுகிறவள். ஏதோ ஓர் எண்ணத்தில் சம்மதித்து இருக்கக் கூடும். இப்போது பின் தொடரும் இளைஞனே கூட அவள் தனது சம்மதத்தை மறுபரிசீலனை செய்யக் காரணமாகலாம்.

சுகந்தி திடீரெனத் திரும்பி அந்த இளைஞனை முறைத்தாள்.

சற்றுத் தடுமாறி, பாதையை மாற்றிக் கொண்டு சிகரெட் வாங்கப் போனான் அவன்.

அம்மா சந்தோஷப்படுவாளா?

இருவரும் சற்று ஒதுங்கி இருந்த டேபிளுக்குச் சென்று உட்கார்ந்தார்கள்.

தண்ணீர்த் தம்ளரை வைத்துவிட்டு, ''என்ன?'' என்றான் வெயிட்டர்.

''ரெண்டு காப்பி...''

தனக்குள் ஒரு சின்ன ஒத்திகை பார்த்துவிட்டு, ''உங்ககிட்டே ஒரு சின்ன சந்தேகம் கேட்கணும்'' என்றாள்.

''நீ காப்பி சாப்பிட வரலையா?'' மாமா சிரித்தார்.

''அம்மாவை ஏன் கூட்டி வரணும். எனக்கென்னமோ பயமா இருக்கு.'' என்றாள் சுகந்தி.

''வரணும்னு பிரியப்பட்டது. ஏன் தடுக்கணும்னு சரின்னேன்... என்ன பயம்...?''

''அம்மாவுக்கு ஆரம்பத்திலேயே இஷ்டம் கிடையாது. டவுன் வாழ்க்கையையும் ஆபீஸையும் பார்த்துட்டு மனம் மாறிடுமோன்னு...''

''மாறாது'' என்றார் மாமா உறுதியான குரலில்.

''அம்மாவைத் தெரியாதா? திடீர்னு முடிவு பண்ணலாம்.''

''பயப்படாதே. அதுக்கு அவசியமே இருக்காது.''

''எப்படிச் சொல்றீங்க?''

''வயிறும்மா... இனி வருமானம் இல்லைன்னா என்ன ஆகும்னு உங்க அம்மாவுக்கும் தெரியும்.''

''......''

''புரியலையா? எல்லாத்துக்கும் அடிப்படையான விஷயம் இதாம்மா'' நெஞ்சுக்குக் கீழே தொட்டுக் காட்டினார். ''இங்க விழுகிற அடியிலே எல்லாமே ஓடிப் போயிடும். கொள்கை கூப்பாடு ஒண்ணும் நிக்காது. முதல்லியே பேசிட்டுத்தான் அப்ளிகேஷனையே வாங்கிக்கிட்டு வந்தேன். சம்மதம் இல்லேன்னா வீட்டிலேயே உன்னைத் தடுத்து நிறுத்தி இருக்க முடியாதா? அக்கா எப்பவோ சமரசத்துக்குத் தயாராயிட்டது. கவலைப்படாதே....''

மாமா பில்லை வாங்கிக் கொண்டு எழுந்தார்.

''ஆனா ஒண்ணு... நம்மாலதான் இனிகுடும்பத்துக்கு வாழ்வுங்கிற எண்ணம் எப்பவும் உனக்கு வேணும். உங்க அப்பா பெயரைக் காப்பாத்தணும். கண்டதுகள்ல மனத்தை அலைய விடப்படாது...''

அப்படிச் சொல்ல நேர்ந்ததற்கு வருத்தப்படுகிற குரலில்தான் அவர் சொன்னார்.

சுகந்திக்குப் பழைய பயம் முற்றிலுமாக விலகி விட்டது. அதைக் கேட்டதும் புதியதாக ஒரு பயம் முளைத்தது அவளுக்கு.



# ஆபத்தான வளைவுகள்

2

"எவ்வளவு சம்பளம் எதிர்பார்க்கிறீர்கள்?"

கேட்டவுடன் அருண் பதில் சொல்லிவிடவில்லை. காரணம், அவனது கவனமெல்லாம் எதிரில் இருந்தவரின் தலை மீது பதிந்திருந்தது. அந்த நூற்றுக்கு நூறு சத வழுக்கைப் பரப்பை, சோழா ஹோட்டலின் 'ஸ்கேட்டிங்–ரிங்'காகப் பாவித்து இரண்டு ஈக்கள் மும்முரமாகப் பயிற்சியில் ஈடுபட்டிருந்ததை ரசனையுடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவனது மௌனத்தைத் தயக்கமாக எடுத்துக் கொண்டார் பாணி – கராகா பார்மசூட்டிகல்ஸ் எம்.டி.

"பரவாயில்லை, நானே சொல்லி விடுகிறேன்.... இரண்டு வருஷங்கள் ட்ரெய்னிங். முதல் வருஷம் அறுநூறு கொடுப்போம்... இரண்டாவது வருஷம் அறுநூற்றைம்பது. அதற்கப்புறம்தான் 'கன்ஃபர்ம்' பண்ணுவோம். சம்மதம்தானே?"

வேலை தேடக் கிளம்பிய அந்த நாட்களில் – ஆறு வருடங்களுக்கு முன்பு – இப்படி யாரேனும் சொல்லியிருந்தால், ஐஸ் வாட்டரில் குளித்தது போலச் சிலிர்த்துப் போயிருப்பான். இப்போதோ, காங்கிரீட் சுவரில் சப்பாத்தி மாவை வீசியெறிந்தால் சுவருக்கு என்ன பாதிப்பு ஏற்படுமோ அதே மனநிலையில் இருந்தான் அருண்.

என்றாலும், அவனுக்குள் ஒண்டிக் கொண்டிருந்த ஏதோ ஒன்று, "அவ்வளவுதானா?" என்று கேட்க வைத்தது.

முழு வழுக்கையின் முன்மண்டையில் புருவங்கள் ஏறின.

"வாட் டூ யூ மீன்?"

"அறுநூறுக்கு மேலே தரமாட்டீங்களா?"

"எவ்வளவு வேணும்? ஆயிரம்? ஆயிரத்திருநூறு?"

"கடைசியாகச் சொன்னது கரெக்டாக இருக்கும் போலிருக்கிறது...."

"உனக்கு வேலையே தெரியாதே? அனுபவம் கிடையாதே?"

"தெரிந்தவன் சுலபமாகச் செய்துவிட்டுப் போய்விடுவான். தெரியாதவன் கஷ்டப்பட்டுச் செய்வான். அதற்கு அதிகச் சம்பளம் தரக் கூடாதா!"

இந்த அபூர்வ லாஜிக்கைக் கேட்டு, பாணி விழிக்கும்போது அருண் தொடர்ந்தான்:

"சார்... நான் பர்ஸ்ட் க்ளாஸ் கிராஜுவேட்...."

"அதனால்தான் இண்டர்வ்யூவுக்கே அழைத்திருக்கிறோம்...."

"ஷார்ட்ஹாண்ட், டைப்ரைட்டிங், டெலிக்ராபி, ஃப்ரெஞ்ச் எல்லாம் தெரியும்.... ப்ளஸ் பாயிண்ட்கள் இல்லையா இதெல்

லாம்?''

"எதுவும் எங்களுக்குத் தேவையில்லை... உன் மைனஸ் பாயிண்ட்களை நான் சொல்லட்டுமா....? நீ ஏதோ நூன்—ஷோவுக்குப் போகிற மாதிரி டிரெஸ் செய்து கொண்டு வந்திருக்கிறாய். உன் பேச்சிலே பணிவு இல்லை.... காலை நீட்டி உட்கார்ந்திருக்கும் விதத்தில் அலட்சியம் அப்பட்டமாகத் தெரிகிறது....''

சட்டென்று கால்களை இழுத்துக் கொண்டான்.

"இருந்தாலும் உன்னை நான் செலக்ட் செய்திருக்கிறேன்... ஏன்? இன்னும் ஆறு மாசமானால் உனக்கு இருபத்தெட்டு வயது ஆகி விடும். உன் நிலை இதே போலத் தொடருமானால், மனசுக்குள் ரொம்பவும் ஒடிந்து போய்விடுவாய்.... ஏற்கெனவே உனக்குள் வளர்ந்திருக்கும் நெகடிவ் சிந்தனைகள் இன்னும் தீவிரமடையும்.... உனக்கும் சுகமில்லாமல், மற்றவர்களுக்கும் பயன்படாமல் போய்விடுவாய். அதைத் தவிர்க்கவே உனக்கு வேலை போட்டுக் கொடுக்க முடிவு செய்தேன்.... புரிகிறதா?''

என்ன பதில்சொல்வதென்று தெரியாமல் மௌனமாக இருந்தான் அருண். பிறகு, "தாங்க்யூ சார்!'' என்றான். "ஒரு வாரம் அவகாசம் கொடுங்கள். யோசித்து முடிவு சொல்கிறேன்.''

''வாட்! ஒரு வாரம் டயமா? என்ன விஷயம்?''

நமுட்டுச் சிரிப்புச் சிரித்தான். "இதுவரைக்கும் இண்டர்வியூவுக்குப் போன இடங்களில் இப்படித்தான் பதில் சொல்லி அனுப்பியிருக்கிறார்கள். ஒருமாறுதலுக்காக நானும் அதே போலச் சொல்ல ஆசைப்பட்டேன்... அதுதான் விஷயம்! கட்டாயம் நான் இந்த வேலையை — நீங்கள் கொடுப்பதாகச் சொன்ன சம்பளத்தை — ஏற்றுக் கொள்கிறேன் சார்!''

பாணி வாய் விட்டுச் சிரித்தார். ''ஐ லைக் யூ!'' என்றார்.

அந்தக் கட்டடத்தை விட்டு வெளியே வந்தான் அருண். சாலையில் ஜனக்கும்பல் எதையோ பிடிக்க அல்லது எடுக்கப் போகிற அவசரத்தில் அலை மோதிக் கொண்டிருந்தது. பஸ்களும், கார்களும், ஆட்டோக்களும் காற்றையும் அமைதியையும் வெறியுடன் மாசுபடுத்திக் கொண்டிருந்தன. நடைபாதையின் அறுபது சதவிகிதத்தை ஆக்கிரமிப்புச் செய்திருந்த வியாபாரிகள், வாடிக்கையாளர்களுக்கு வலை வீசிக் கொண்டிருந்தார்கள்.

பத்திரிகைக் கடை ஒன்றின் எதிரே வந்ததும் கால்கள் நிற்க, கண்கள் மேய்ச்சலுக்கு அவிழ்த்து விடப்பட்டன. வரிசையாகப் பரப்பப்பட்டிருந்த பத்திரிகைகளில் நடிகைகள் மாத நாவல்களின் கண்ணாடி அட்டைக்குள்ளிருந்து கவர்ச்சி காட்டிக் கொண்டிருந்தார்கள். இரட்டை அர்த்தத் தலைப்புகள், ரத்தம் கொதிக்கும் தலைப்புகள், கிளுகிளுக்க வைக்கும் தலைப்புகள், கொலைகள், கற்பழிப்புகள், ஆவிகள், அச்சுறுத்தல்கள்....

சட்டென்று, சற்று முன்பு அந்த ரிஸப்ஷன் அறையில் நடந்த சம்பவம் நினைவுக்கு வர, மழைக்காலக் காளான்களாக மண்டைக்குள் கேள்விகள் முளைத்தன.

யார் அந்தத் தாடிக்காரன்? அவனுக்கு எப்படி என் பழைய பெயர் தெரிந்தது? தாடிக்காரனை நோக்கிச் சுட்டவன் யார்? ஏன் சுட்டான்? தாடிக்காரனைச் சூழ்ந்திருக்கும் ஆபத்து என்ன? அதிலிருந்து நான் எவ்வாறு அவனைத் தப்புவிக்க முடியும் என்று எதிர்பார்க்கிறான்...?

சற்று நேரம் ஓர் இடத்தில் உட்கார்ந்து யோசிக்க வேண்டும் போலிருந்தது. அருகிலிருந்த ஹோட்டலுக்குள் நுழைந்தான்.

இன்னும் லஞ்ச் டயம் ஆகவில்லையாதலால் கூட்டம் அதிகமில்லை. மேஜைகள் தோறும் ஈக்கள் வட்ட, மாவட்ட, மாநில மாநாடுகள் நடத்திக் கொண்டிருந்தன.

ஒரு காப்பி கொண்டு வரும்படி சர்வரிடம் சொல்ல, அவர் அடுத்த மேஜையிலிருந்து இரண்டு தண்ணீர் டம்ளர்களை எடுத்து இவன் மேஜை மீது வைத்துவிட்டு, சமையலறை என்ற புனைபெயர் தாங்கிய இருட்டுக் குகையில் போய்ப் பதுங்கிக் கொண்டார்.

சற்றுத் தள்ளி இருந்த பெரிய கண்ணாடி அலமாரியின் கதவைத் திறந்து, ஒரு தட்டு நிறையப் பளபளக்கும் ஜாங்கிரிகளைக் கொண்டு வந்து வைத்துவிட்டு அழுக்குத் துண்டை உதறிவிட்டு அப்பால் போனார் சரக்கு மாஸ்டர்.

'வேலை கிடைத்துவிட்டது என்ற நல்ல செய்தியுடன் வீட்டுக்குப் போகப் போகிறோம். வெறுங்கையுடன் செல்வதற்குப் பதில் இனிப்புப் பொட்டலத்துடன் போய் நின்று எல்லாரையும் சந்தோஷப்படுத்தினால்என்ன?' என்றுதோன்றியது அருணுக்கு.

பணம் இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ளும் உத்தேசத்துடன் சட்டைப் பையில் கைவிட்டான். விரல்களை வெளியே எடுத்த போது ரூபாய் நோட்டுக்களுடன் இரண்டாக மடிக்கப்பட்ட ஒரு துண்டுக் காகிதமும் சேர்ந்து வந்தது.

என்ன இது?

ஆர்வம் மேலிட, பிரித்துப் பார்த்தான்.

'முட்டைக் கண்ணா! வளசரவாக்கம், 18 வது குறுக்குத் தெரு, மூன்றாம் நம்பருக்கு இன்று மாலை 7- மணிக்கு வா!'

அட! அந்தத் தாடிக்காரன் வெளியேறும் போது தன்மீது தடுக்கி விழுந்தது இதைச் சேர்ப்பிக்கத்தானா!

'டொக்!'

அலுப்புடன் கொண்டு வந்து ஆத்திரத்துடன் வைக்கப்பட்ட காப்பியை மளமள

முகுந்தன்

